வண்ணநிலவன் , தேவதேவன், வண்ணதாசன், விமலாதித்த மாமல்லன்,
ரவிக்குமார், மு. ராஜேந்திரன், முகமது சஃபி, ரவிசுப்பிரமணியன்



# அம்ருதா
# AMRUDHA

வேள்வி 13 கலசம் 149
Volume 13 Issue 149

டிசம்பர் 2018 ரூ.25
December 2018 Rs. 25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism



சர்கார்

## கலைத்துவம் கலைக்கும் அலை

அ. ராமசாமி

வேள்வி 13 கலசம் 149



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

டிசம்பர்-2018 விலை ரூ. 25



**அம்ருதா**
**#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ**
**சக்திநகர், போரூர், சென்னை-600116**
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

**06 கவிதை**
மண்குதிரை

**08 புனைவு என்னும் புதிர்**
விமலாதித்த மாமல்லன்

**13 கவிதை**
ரவிசுப்பிரமணியன்

**14 சர்கார்: கலைத்துவம் கலைக்கும் அலை**
அ. ராமசாமி

**20 சிறுகதை**
ரவிக்குமார்

**24 நினைவுகள் மரிக்கும்போது**
ராஜகோபால்

**26 சிறுகதை**
இளங்கோ

**37 கவிதை**
டி. கண்ணன்

**38 இந்தோனேசியா**
மு. ராஜேந்திரன்

**48 கவிதை**
தேவதேவன்

**50 சிறுகதை**
வண்ணதாசன்

**59 கவிதை**
ஷங்கர்ராமசுப்பிரமணியன்

**62 பைத்தியமும் பைத்தியக்காரனும்**
முகமது சஃபி

**64 பின்நகர்ந்த காலம்**
வண்ணநிலவன்

# மீண்டும் ஒரு பேரழிவு!

பிரபு திலக்

மீண்டும் ஒரு பேரழிவைச் சந்தித்திருக்கிறது தமிழகம். 15-11-2018 அன்று நள்ளிரவு வேதாரண்யத்தில் கரையைக் கடந்த கஜா புயல், தமிழகத்தின் 12 மாவட்டங்கள் வழியாக சுழன்றடித்து நகர்ந்து, கொடைக்கானல் மலைகளைக் கடந்து தமிழகத்தைவிட்டு வெளியேறியது. கஜா புயல் தமிழகத்துக்குள் நுழைந்த வேதாரண்யத்தில் ஏற்படுத்தியுள்ள அழிவுகளுக்கு சற்றும் குறைவில்லாதது, வெளியேறும் முன்பு கொடைக்கானலில் நிகழ்த்தியுள்ள அழிவு. வழியெங்கும் எங்கு பார்த்தாலும் அழிவு, அழிவு, அழிவுதான். தமிழகத்தின் முதுகெலும்பையே முறித்துப் போட்டிருக்கிறது. நிச்சயம் இதிலிருந்து பாதிக்கப்பட்ட மக்கள் மீண்டெழ நீண்டகாலம் எடுக்கும்.

தமிழக அரசின் முதல்கட்ட மதிப்பீட்டில், "கஜா புயலால் ரூ. 15 ஆயிரம் கோடி அளவுக்கு சேதம் ஏற்பட்டுள்ளது. 1 லட்சத்து 70 ஆயிரம் மரங்களும், 1 லட்சத்து 17 ஆயிரத்துக்கும் அதிகமான வீடுகளும் சேதம் அடைந்து இருக்கின்றன. 65க்கும் மேற்பட்டவர்கள் பலியாகியுள்ளனர்" என தெரிவித்துள்ளனர். ஆனால், களத்தில் பணிபுரிபவர்களோ, அரசு அறிவித்துள்ளதைவிட நிலமை மோசமாக இருக்கிறது என்கின்றனர்.

எல்லா ஊர்களிலும் மின்கம்பங்கள் அடியோடு சாய்ந்துவிட்டது. கிட்டத்தட்ட புதிதாக மின்பாதை அமைப்பது போன்ற பணிகளை செய்யவேண்டிய அளவுக்கு மின்தடங்கள் உருக்குலைந்துவிட்டன. மின்சாரம் இல்லாததால் அனேகமாக எல்லா ஊர்களிலும் மக்கள் தண்ணீருக்காக பெரும் அல்லல்படும் நிலை ஏற்பட்டுவிட்டது. தண்ணீர் கிடைக்காமல் ஆங்காங்கே மக்கள் தினமும் சாலை மறியல் போராட்டத்தில் ஈடுபட்டதே அதற்கு சாட்சி.

முன்னெச்செரிக்கை நடவடிக்கைகளில் சிறப்பாக செயல்பட்டதாக அரசுக்கு பாராட்டுகள் குவிந்தாலும், புயலுக்குப் பின்னான மீட்புப் பணி மிக,மிக சவாலானது. காரணம், திருப்பும் பக்கம் எல்லாம் அவ்வளவு அழிவு, அதனால், எவ்வளவு ஊழியர்களை ஈடுபடுத்தியும் அரசால் மின்சாரம், தண்ணீர் கொடுக்கும் பணிகளைக்கூட துரிதப்படுத்த முடியவில்லை.

இந்நிலையில், சென்னை வெள்ளத்தின்போது திடீரென புறப்பட்டு வந்ததுபோல் ஒரு தன்னார்வலர்கள் குழு கஜா புயலில் இருந்து பாதிக்கப்பட்டவர்கள் மீளவும் உதவி இருப்பது நம்பிக்கையளிக்கும் செய்தி. தண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்ட பகுதிகளில் அரசு மட்டுமல்லாமல் சில தன்னார்வலர்களும் ஜெனரேட்டர்களை கொண்டுவந்து மின்மோட்டார்களை இயக்கினர்.

குறிப்பாக இளைஞர்கள், ஜல்லிக்கட்டு போராட்டத்தைப் போலவே கஜா புயல் நிவாரணப் பணிகளிலும் ஒருங்கிணைந்து ஆச்சர்யத்தை ஏற்படுத்தினார்கள். பாதிக்கப்பட்ட பெரும்பாலான ஊர்களில் நிவாரணப் பொருட்களை பெற்றுக்கொள்வதற்கு அந்த ஊரில் ஒரு குழு அமைத்திருந்தார்கள். நிவாரண வண்டிகளில் இருந்து பொருட்களைப் பெற்று பகிர்ந்தளித்தார்கள்.

ஆனால், சென்னை வெள்ளத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கும் கஜா புயலில் பாதிக்கப்பட்டவர்களுக்கும் உள்ள வித்தியாசம், சென்னையில் பெரும்பான்மையானவர்கள் மாத சம்பளக்காரர்கள். உடமைகளை இழந்திருந்தாலும், அடுத்தடுத்த மாத சம்பளங்களில் இருந்து அவர்கள் மீண்டுவிட்டார்கள். கஜா புயலில் பாதிக்கப்பட்டவர்களிலோ பெரும்பான்மையானவர்கள் விவசாயிகள். கஜா புயலில் அதிக அளவு சரிந்தது தென்னை மரங்கள்தான். டெல்டா பகுதிகளிலேயே அதிக அளவில் தென்னை உற்பத்தி நடக்கும் இடம் பட்டுக்கோட்டை, பேராவூரணி, ஆலங்குடி,முத்துப்பேட்டை போன்ற பகுதிகள்தான். இந்த பகுதிகளில் கஜா புயலால் தென்னை மரங்கள் 70 சதவீதம் வீழ்ந்துவிட்டன.

தென்னை மரங்கள்தான் இந்த பகுதி மக்களின் வாழ்வாதாரமாக இருந்துள்ளது. இது முழுக்கவும் இப்போது சிதைந்து கிடக்கிறது. நெல், கரும்பு போன்ற பயிர்கள் பாதிக்கப்பட்டால் அந்த ஒரு ஆண்டுதான் விவசாயிகளை பாதிக்கும். ஆனால், தென்னை, பலா, முந்திரி போன்ற மரப்பயிர்கள் அழிந்தால் அடுத்த சில ஆண்டுகள் அதன் பாதிப்பு இருக்கும். இனி தென்னையை வைத்து வளர்த்தாலும் அது முழுமையான பலனைக் கொடுக்க எட்டு ஆண்டுகள் ஆகலாம். அதுவரை அந்த பயிரை நம்பியுள்ள விவசாயிகளின் வாழ்வாதாரத்துக்கு என்ன செய்வது என்ற கேள்வி அவர்களைக் கண்ணீர் கடலில் தள்ளியுள்ளது.

தனது நிலத்தில் இருந்த தென்னை மரங்களை நம்பி, மகளைக் கட்டிக்கொடுக்க கடன் வாங்கிய விவசாயி சுந்தர்ராஜ், இப்போது அந்த தென்னையே அழிந்துவிட்ட நிலையில், எப்படி கடனை அடைக்கப்போகிறோம் என மனமுடைந்து தற்கொலை செய்துகொண்டுள்ளார்.



“இப்படி தென்னை விழுந்துள்ள பகுதிகள் எல்லாமே காவிரியின் கழிமுகப் பகுதிகள். திருவாரூர், நாகப்பட்டினம், கீழ் தஞ்சையில் காவிரி நேராக பாய்கிறது. பட்டுக்கோட்டையை சுற்றிய பகுதிகளுக்கு கிளை ஆறுகள்தான். தண்ணீர் முழுமையாக வந்தால் தான் அங்கு சாகுபடி நடக்கும். மேலும், நெல்லுக்கும் லாபம் குறைந்த நிலையில் கடந்த இருபது ஆண்டுகளாக அரசாங்கமே இப்பகுதி மக்களை தென்னைப் பயிரை நகர்த்தி இருக்கிறது. அவர்களும் கடந்த ஓரிரு ஆண்டுகளாகத்தான் அதனால் கணிசமாக பலனடைய ஆரம்பித்தார்கள். அதற்குள் இப்படியாகிவிட்டது” என்கிறார்கள் அப்பகுதியைச் சேர்ந்த நண்பர்கள்.

தென்னையைப் பிள்ளை என்பார்கள். “சொந்த பிள்ளையைவிட வச்ச பிள்ளை கைகொடுக்கும்” என்பது கிராமத்து வழக்கு.இப்போது தென்னம்பிள்ளைகளும் கைவிட்ட நிலை. தங்கள் வாழ்வை பூஜ்யத்திலிருந்து தொடங்கி மீட்டெடுக்க வேண்டும். பெரும்பாலானவர்கள் பூஜ்யத்தில் இருந்து இல்லை, தென்னை வளர்ப்பிற்காகவும் தென்னையை நம்பி பிள்ளை வளர்ப்பு திருமணம் போன்ற இதர காரியங்களுக்காகவும் கடன்கள் வாங்கி அடைக்கமுடியாமல் பூஜ்யத்திற்குக் கீழ் நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் மீண்டு வர அரசாங்கங்கள் உதவ வேண்டும். ஆனால், மத்திய அரசோ மௌனமாக இருக்கிறது.

இயற்கை சீற்றங்களை தடுக்க முடியாது. ஆனால், அதை எதிர்கொள்வதில், அதிலிருந்து மீள்வதற்கான நிவாரணப் பணிகளில் நாம் கற்றுக்கொள்ள நிறைய உள்ளது என்பதையே கஜா புயலும் நினைவூட்டி சென்றுள்ளது.

ஆங்காங்கே போராட்டங்களில் ஈடுபட்டவர்கள் நிவாரணப் பொருள் சென்ற வாகனங்களையும் அனுமதிக்காமல் வழி மறித்தது கவலைக்குறிய செய்தி. நிவாரண வாகனங்களில் இருக்கும் பிஸ்கட் பாக்கெட்டுகளையும் அரிசியையும், தண்ணீரையும் வைத்து அவர்கள் ஒன்றும் மாடி வீடு கட்டப் போவதில்லை. ஆனாலும், கும்பல் மனோபாவம் போராட்டத்தையே ஒரு கொண்டாட்டமாக மாற்றுகிறது; நிவாரண உதவிக்காக காத்திருப்பவர்களின் வலியை மறக்கச் செய்கிறது.

தட்பவெப்பநிலை மாற்றத்தினால், இனிமேல் பெரும்புயல்கள் தமிழ்நாட்டை அடிக்கடி தாக்கலாம் என்கின்றன ஆய்வு முடிவுகள். எனவே, மீண்டும் தென்னையை அங்கு வளர்ப்பது பயனுள்ளதா என்று ஆய்வு செய்ய வேண்டும். கூடும் வெப்பநிலைக்கு ஏற்ப பயனுள்ள தாவரங்களைக் கண்டடைய வேண்டும். ●

# மலைச்சாமிகள்

## மண்குதிரை

ஓவியம்: Navanshu

1.
மலைச்சாமி கல்லூரியின் முதல் மாணவராகத் தேர்வாகி
தங்கப்பதக்கம் வெல்கிறார்

நேர்மையான காவல்துறை அதிகாரியாக
கடமை புரிகிறார்

கறைபடியாத அரசியல்வாதியாக
சட்டமன்றம் சென்று வருகிறார்

கனிவான நிலப்பிரபுவாக
நாலைந்து படி சேர்த்து அளக்கிறார்

ரௌத்திரம் மிகுந்த தொழிலாளியாக
முதலாளித்துவத்தை எதிர்க்கிறார்

நம்முடைய மலைச்சாமி
மலைச்சாமியாக நடித்த
தன்னுடைய இருநூறாவது படத்தில்
மர்மமான முறையில்
கொலை செய்யப்படுகிறார்

2.
மொழியின் சௌந்தர்யத்தைப் பற்றி
இலக்கியத் தேடலில் இறங்கும் மலைச்சாமி
மாவோவின் எழுத்துக்களை வாசிக்கிறார்
சேவின் கருத்துக்களால் ஈர்க்கப்படுகிறார்

பகத்சிங்கின் புத்தகம் வாங்கும் அங்காடியில்
தொலைபேசி எண்ணைப் பரிமாறிக்கொள்கிறார்
அவர் வசிக்கும் நகரின் கிளையின் கீழ்
உறுப்பினராகச் சேர்க்கப்படுகிறார்

உலகத்தின் புரட்சி இலக்கியம் அத்தனையும் வாசிக்கிறார்
இன்னொரு புதிய விடுதலை வேண்டுமென உணர்த்தப்படுகிறார்

கட்டுரை எழுதுகிறார்
மேலும் மேலும் வாசிக்கிறார்
அறிக்கை தயாரிக்கிறார்
உள் அரங்குகளில் உரை வீச்சு நிகழ்த்துகிறார்

பணியிலிருந்து அடிக்கடி விடுப்பு எடுக்கிறார்
உறவுகளை மறக்கிறார்
உணவு உண்ணக்கூட நேரமில்லாமல்
வந்து கொண்டிருக்கும் புரட்சிக்காக
ஆயத்தமாகிறார்



புதிய பெயரிட்ட
காவல் துறையின் தேடுதல்
நடவடிக்கையின்போது
மலைச்சாமி தலைமறைவாகிறார்

3.
தேச வரைபடத்தில்
சிறு புள்ளியாக மறைந்திருக்கும்
மிகச் சிறிய கிராமமொன்றில்
ஊராட்சி அலுவலகத்தில்
மலைச்சாமி பணியாற்றி வருகிறார்

சங்கரலிங்கம் பிள்ளை ரூபாய் 31
ராக்கப்பக் கோனார் ரூபாய் 31
என்று முன்பே எழுதி வைத்துவிட்ட
ரசீதுகளைக் கிழித்து
தண்ணீர்க் கட்டணம் வசூல்செய்து களைப்படைகிறார்

அடுத்த மாதம் ஏலத்திற்குச் செல்லவிருக்கும்
நூற்றாண்டு கடந்த
பெரிய மின் விசிறியில் இளைப்பாறுகிறார்

நகரத்தில் காத்திருக்கும் தன் மனைவிக்கு
என்ன பரிசு வாங்கிச் செல்லலாம் என



அளவு சரியில்லாத தன் புதிய திருமண மோதிரத்தை
சுழற்றிச் சுழற்றி யோசிக்கிறார்

அவளது கட்டுச் சோற்றை எடுத்துக் கொண்டு
நினைவுப்பாதையில் நடக்கிறார்
சாம்பார் சாதம், கூட்டு, அவியல், இனிப்பு
இறுதியாக மோர் பருகியும் ஆசுவாசம் கொள்ளாமல்
யோசனையில் பீடிக்கப்பட்டவராக இருக்கிறார்.

கை கழுவும்போது
தளர்வு கொண்டவராக
எப்போதும் கழுவி எடுத்துச் செல்லாத
சாப்பாட்டுப் பாத்திரங்களையெல்லாம்
கழுவுகிறார்

இன்றைக்கு இது போதும் என்று
நிறைவுடன் திரும்புகிறார்.

(அம்பானியாக முயன்று அலுவலனாகிவிட்ட நண்பன் கோபி
என்ற கோபாலகிருஷ்ணனுக்கு)

4.

தாழ் பழுதடைந்த
என் அறைக்குள் நுழைந்த
நள்ளிரவுக் காற்று
இருளில் நெளிந்துகொண்டிருந்த தண்ணீர்க் குடுவையை
நிலை இழக்கச் செய்தது
கலைந்து விழித்தேன்

அனிச்சயாக எழுந்த என் கைகளைப் பார்த்தேன்
மலைச்சாமியின் கைகளாக இருந்தன
மயிர் அடர்ந்திருந்த மார்பும் அவனுடையதாக
தோள்களும் அப்படியே

நான் யாரென் உறுதிசெய்ய முடியாத நிலையில்
பதற்றம் நீடிக்கிறது. ●

மண்குதிரை <mankuthirai@gmail.com>

# புனைவு என்னும் புதிர்

## ஷோபாசக்தி சிறுகதை தேசத்துரோகி

விமலாதித்த மாமல்லன்

கதையில் செய்தி இருக்கலாம்; ஆனால், செய்தி கதையாகுமா?

எழுதத் தெரிந்தவன் கையில் எடுத்தால் எதுவும் கலையாகும் என்பதற்கு எடுத்துக்காட்டுதான் இந்தக் கதை.

பார்வையுள்ள எழுத்தாளனுக்கு, ஆழ் மனதின் அடுக்குகளில் தேங்கிக் கிடக்கும் வாழ்க்கை அனுபவங்கள், திறப்புக்காகக் காத்திருக்கும் அணைக்கட்டைப் போன்றது. வாய்ப்பு கிடைத்ததும் பிரவாகமாகிவிடும்.

இலக்கியவாதியின் எழுத்துக்கள் பெரும்பாலும் கற்பனையாகப் புனையப்பட்டவை அல்ல. ஆனால், அவர்களே புனைவு என்னும் சொல்லை அதிகம் பயன்படுத்துபவர்களாக இருக்கிறார்கள். ஆனால், அந்தந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைக்கு ஏற்றார்போல் புனைகிற வேலையை வாழ்நாள் முழுக்க செய்துகொண்டிருப்போர் பெரும்பாலும் பொழுதுபோக்கு ஒப்பனை எழுத்தாளர்களே. ஆனால், அவர்கள் புனைவு என்கிற வார்த்தையைப் பயன்படுத்துவதே இல்லை. அது இலக்கியம் சம்மந்தப்பட்டது என்பதுபோல் விலகி இருக்கிறார்கள்.



எனில், சொந்த அனுபவங்களை அடிப்படையாகக்கொண்ட, சிறந்த இலக்கிய கதைகள் எங்கே எப்படிப் புனைவாக ஆகின்றன என்கிற கேள்வி இயல்பாக எழுகிறது.

சிறந்த எழுத்தாளர்களின் கதைகளில், அவற்றில் விவரிக்கப்படும் சம்பவங்களில், பல நேரங்களில் அந்த எழுத்தாளர் நேரடியாகப் பங்குபெற்றிருப்பதுகூட இல்லை. கதை எழுதுவதற்கான முகாந்திரமாக, வெளியுலகிலிருந்து பெருகிற தாக்கத்தின் காரணமாக அவனுக்குள் உண்டாகும் அதிர்வலை, கடந்த காலத்துக்கு அவனை இழுத்துச் செல்கிறது. இளமையில் அவன் பார்த்த, அனுபவித்த இடங்களும் மனிதர்களும் சூழலுமாக வாழ்ந்துபெற்ற அனுபவங்களுமாக, அவன் சொல்லவரும் செய்தியுமாகப் பின்னிப்பிணைந்து, புனையப்பட்டு வெளிப்படுகையில் எந்தக் காலத்திலும் காலாவதியாகாத இலக்கியமாக ஆகிறது.

உள்ளூர் செய்தித்தாளில் தொடங்குகிற இந்தக் கதை, சர்வதேச பத்திரிகையாளர்களின் மாநாட்டில் சொல்லப்படுகிற கருத்தில் முடிகிறது. இவ்விரண்டுக்குமிடையில் தத்ரூபமாகக் கட்டியெழுப்பப்பட்டிருக்கிறது ஒரு கிராமத்தில் நிகழ்ந்து முடிந்த வரலாற்றுக் கொடூரம்.

கதையின் முதல் பத்தியையும் இறுதிப் பாராவையும் சற்றே கூர்ந்து வாசித்தால், கதை ஆற்றொழுக்கான சரளத்தில் இருக்கிற தோற்றம் காட்டினாலும், ஒவ்வொரு சொல்லையும் ஷோபாசக்தி எவ்வளவு கவனமாக எழுதியிருக்கிறார் என்பது, துல்லியமாகப் புலப்படும்.

சில எழுத்தாளர்கள், எழுத உட்கார்ந்தால் ஒரே முறையில் எழுதிவிடுவார்கள். சிலர் எழுதியதைத் திரும்பத் திரும்ப எழுத எழுத பல விஷயங்கள் சேரும் விலகும் மெருகேறும். முன்னவர்களின் கதைகளில் உணர்ச்சிக்கே முன்னிலை கொடுக்கப்பட்டிருக்கும். விதிவிலக்காக, நிறைய நுணுக்கங்களும் நகாசுகளுமாக பொற்கொல்லர் போல கதையெங்கும் கொட்டிக் கிடந்தாலும் ஒரே முறையில் உணர்ச்சி துள்ள எழுதிவிட்டுப் படித்துக்கூட பார்க்காதவராக இருந்தவர் என தி. ஜானகிராமனைக் கூறலாம். பின்னவர்களில் பிரதானமாக சுந்தர ராமசாமியைக் கூறலாம். ஒரே முறையில் எழுதிவிடுபவர்தான் என்றாலும் உணர்வுகளை வெளிப்படையாகவோ உரக்கவோ எழுத்தில் வெளிப்படுத்தாத அசோகமித்திரன் ஒருமுறைக்கு இருமுறை கவனமாகப் படித்துப் பார்த்துத் திருத்தக்கூடியவர்.

“எழுதினதைத் திரும்பத் திரும்ப எழுதணும். ஆனா இப்படி திரும்பத் திரும்ப எழுதியிருக்கோம்னு வாசகனுக்குத் தெரியாத மாதிரி ஒரு முழுமை அதுல இருக்கணும்” என்று, நான் எழுத ஆரம்பித்த காலத்தில் நேர்ப்பேச்சில் கூறியவர் ந. முத்துசாமி.

இப்படித்தான் எழுதப்படவேண்டும் என்று, கதை எழுதுவதற்கு எந்த இலக்கணமும் இல்லை



என்பதென்னவோ உண்மைதான் எனினும், கொய்த மலர்போல் எழுத்தில் முழுமை கூடி இருப்பது என்பது அப்படியொன்றும் லேசுப்பட்ட காரியமுமில்லை.

இறுதிப் பத்திக்கு வந்துசேர ஷோபாசக்தி என்னென்னவற்றையெல்லாம் மந்திரவாதியின் நேர்த்தியுடன் முதல் பாராவிலேயே விதைக்கிறார் என்று பார்ப்போம்.

*அரசாங்கத்தாலும் அவனது பெறாமகனாலும் காசு சேர்க்க அறைக்கு வந்துபோகும் இயக்கக்காரராலும் பல தருணங்களில் தேசத்துரோகி என விளிக்கப்பட்ட ஸ்டான்லி இராஜேந்திரா*

தேசத்துரோகியாக விளிக்கப்படும் கதையின் நாயகனான ஸ்டாலின் இராஜேந்திரா, அவனது கிராமத்தை அரசப்படை ஆக்கிரமித்தபோது, எவ்வளவு நெருக்கடியான நிலையை, அவன் எப்படி எதிர்கொண்டான், அந்த சூழ்நிலைக்குள்ளாக தனது கிராம மக்களிடம் எவ்வளவு மனிதாபிமானத்துடன் நடந்துகொண்டான், அவனை தேசத்துரோகியாகக் கூறியவர்கள், மக்கள் உயிரைப் பணயம் வைக்கவேண்டிவந்தபோது எங்கே போனார்கள், அதற்குப்பின்னரும்கூட எப்படி நடந்துகொண்டார்கள், யார் தேசத்துரோகிகள் என்பதுதான் கதை. இதை இப்படி உரத்த குரலில் சொல்ல எழுத்தாளன் தேவையில்லை. ஆனால், பெரும்பான்மை முற்போக்கு எழுத்தாளர்கள் இப்படித்தான் ஒலிபெருக்கியைப் போல சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள் என்பது வேறு விஷயம்.

கதையில் குட்டிக்குட்டியாகவும் பெரிய அளவிலுமாக, எத்தனைக் கதாபாத்திரங்கள் ரத்தமும் சதையுமாக உருவாகி, காட்சிரூபமாய், வாசிப்பவனை சிரிக்கவைத்து, கலங்கவைத்து, நெகிழவைத்து, திகைக்க வைக்கின்றன என்பதுதான் ஷோபாசக்தியின் எழுத்து நிகழ்த்தும் வித்தை. முதல் பத்திக்கும் இறுதி பாராவுக்கும் இடையில் நடப்பது கதையாக அல்ல, வாசகனின் மனக்கண்ணில் போரை மையமாகக் கொண்ட திரைப்படமாக விரிகிறது.

முதல் பத்தியின் அடுத்த வாக்கியம்,

*தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் அய்க்கிய தேசியக்கட்சி அரசுக்கும் 'பரஸ்பர புரிந்துணர்வு ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டதை*

அந்தக் கிராமத்து மக்களில், பார்வைக்கு ஆரோக்கியமாய் உடல் வலிமை கொண்டவர்களாய் தெரிகிற ஆண்கள் அனைவரும் அரசப்படையால் புலிகளாகப் பார்க்கப்படுவதும், புலிகள் வைத்திருக்கும் கன்னிவெடிகளை வெடித்துத் தாங்கள் முன்னேற, வழி ஏற்படுத்த, அரசு அதிகாரிகளாலும் முக்கியஸ்தராலும் அப்பாவி மக்கள் பலிகொடுக்கப்படுவதும் எப்படி நிகழ்கிறது என்பதுதான் கதையின் உச்சம்.

ஸ்டான்லி இராஜேந்திராவுக்கு உறவுமுறையில் பெறாமகனாக இருக்கும் புலி பொடியன் அவனை 'தேசத்துரோகி' என்று அழைப்பது ஒரு கூறு என்றால், கன்னிவெடிகளுக்குள் அப்பாவி மக்களை விரட்டிவிட்ட நபர் பிற்காலத்தில் அரசின் முக்கிய நபராக இருக்கிறார் என்பது

இன்னொரு கூறு. அப்பேர்ப்பட்டவரைப் பற்றிதான் பத்திரிகையாளர்கள் நம்பிக்கை தெரிவிக்கிறார்கள் என்பதும், இவர்கள் இருவருக்குமிடையில் ஒப்பந்தம் நடக்கிறது என்பதே நகைமுரண்.

இறுதிப் பத்திக்கு வருவோம்.

கதையில் அரசப்படையின் கொடூர விசாரணையின்போதும் தாக்குதலின்போதும் அவர்களே தேவலாம் என்கிற அளவுக்கு ஈவு இரக்கமின்றி நடந்துகொண்ட, அப்போது முகமறியாதவராக இருந்த அந்த நபர், பிற்காலத்தில் பிரபல தலைவராக ஆகி இருக்கிறார். சர்வதேசப் பத்திரிகையாளர்கள் மாநாட்டில் அவரைக் குறித்து நம்பிக்கை தெரிவிக்கிறார்கள் என்று நகைச்சுவையுடன் கதை முடிகிறது.

இந்தப் பத்தியில் அவர் குறித்து தெரிவிக்கப்படும் நம்பிக்கை அயிட்டங்கள் என்று கேலியாகக் குறிப்பிடப்படுவதையும் கதையின் இடைப்பகுதியில் பெரும்பகுதியை ஆக்கிரமித்துக்கொள்ளும் ஒரு அச்சுப்பிச்சுக் கதாபாத்திரத்தின் பெயரே அயிட்டம் என்று இருப்பதையும், இது தற்செயலல்ல வறண்ட புன்னகை என்பது பிடிபடக்கூடும். இதற்காகவே அயிட்டம் என்கிற பெயரில் அப்படியொரு பாத்திரம் அவ்வளவு விஸ்தாரமாக உருவாக்கப்பட்டிருக்கிறது என்பதே கலையின் சூக்குமம்.

கதையின் இடைப்பகுதியில், இலங்கை மற்றும் இந்திய ராணுவம் பற்றிய ஒப்பீடுபோல இப்படி ஒரு வரி மின்னல் கீற்றாக வந்துபோவதும் குறிப்பிடத்தக்கது. இது வெறும் செய்தியாக இல்லாமல் கதையோட்டத்திற்கும் அவசியமாக இருக்கிறது.

> *ஆமிக்காரர்கள் ஒழுங்கைகளிலும், வீதிகளிலும் முன்னே ஓட்டி பின்னே நடந்தார்கள். மிதிவெடி, கண்ணிவெடி போன்ற பயக்கெடுதியிலேயே தங்களை முன்னே நடக்கவிட்டு அவர்கள் பின்னே வருவதை ஸ்டான்லி உணர்ந்துகொண்டான். இப்படியான தேவைகளுக்கென்றே இந்தியன் ஆமிக்காரர் இந்தியாவிலிருந்து ஆடுகளை இறக்குமதி செய்து தங்கள் படையணிக்கு முன்னே ஓட்டிச் சென்றதும் ஞாபகத்தில் வந்தது.*

பெறாமகனாக இருந்தும் புலியாக இருக்கும் பொடியனால் தேசத்துரோகி என்று அழைக்கப்படும் ஸ்டான்லி, ஆமிக்காரர்களிடம் மாட்டிக்கொண்டிருக்கும் ஒரே புலியான ரேமன் என்கிற பொடியனை தன் மொழிபெயர்ப்பின் மூலம் காப்பாற்றவே செய்கிறான். அதுகூட போகிற போக்கில்தான் நடக்கிறதேயன்றி, வண்ணக்குறியிட்டுத் தூக்கிக் காட்டப்படவில்லை.

மக்களில் யார் புலி என்பதை எவருமே சொல்லவில்லை என்பதால்தான் எல்லோருமே ஆர்மியால் மிதிவெடிக்குள் விரட்டப்படுகிறார்கள். விரட்டப்படும் இருபத்து சொச்சம் பேருக்கும் அங்கிருப்போரில் ரேமன் மட்டுமே புலி என்பதும் தெரியும். ஆனாலும், ஸ்டான்லி உட்பட அந்தத் தேசத்துரோகிகள், புலியைக் காட்டிக்கொடுக்காமலே மிதிவெடுக்குள் செல்கிறார்கள் என்பது அடிக்கோடிட்டோ நாடகத்தனமாகவோ சொல்லப்படவில்லை.

"சிறுகதை எழுதுவது எப்படி என்று கேட்பவர்களுக்கு, 2011இல் எழுதப்பட்ட 'அறம்' கதையைப் படியுங்கள் என்று சிபாரிசு செய்வேன்" என்று கூறிய இலங்கையின் புலம்பெயர் எழுத்தாளர் அ. முத்துலிங்கத்துக்கு, 2002லேயே, அவர்களிடமிருந்தே எழுதப்பட்டிருக்கும் இந்தக் கதையை ரெக்கமெண்டு செய்ய எப்படித் தோன்றாமல் போயிற்று என்று வியப்பாக உள்ளது. ஒருவேளை இவ்வளவு ரத்தக் களரியாக இருந்தும் இது மெலோடிராமாவாக சொல்லப்படவில்லை என்பது காரணமாக இருக்குமோ என்னவோ.

தேசத்துரோகியை எழுதியவனின் இலக்கு, தேகங்கள் வெடித்துச் சிதறுவதை விலாவாரியாகக் காட்டுவதில் இல்லை. தேசத்துரோகிகளை அடையாளம் காட்டுவதில் இருக்கிறது. எனவேதான், இது சிறந்த சிறுகதையாகவும் இருக்கிறது. ●

**விமலாதித்த மாமல்லன் <madrasdada@gmail.com>**

---

தேசத்துரோகி - ஷோபா சக்தி; விலை ரூ. 120; வெளியீடு: கருப்புப் பிரதிகள், சென்னை; தொலைபேசி: +91 94442 72500; மின்னஞ்சல்: karuppupradhigal@gmail.com

# குழந்தமை

## ரவிசுப்பிரமணியன்



எப்படி என்றெல்லாம் கேட்டு
அபிப்ராயங்கள் சொல்லித் திகிலூட்டாதே
இதுவரை கடந்தது போல
இதையும் கடந்துவிடமாட்டேனா
வரையறைகள் திட்டங்கள் ஆதாரங்கள் ஏதுமில்லை
வழியின் போக்கில் திரியவிடு
கழிவிரக்கக்குழியில் தள்ளிவிட்டு,
நீயும் நடுங்கிக்கிடக்காதே

ஆளரவமற்ற நள்ளிரவில்
காற்று கோத நட்சத்திரங்கள் பார்க்கவில்லையா
காலைப்பனியின் ஊதலோடு
கடற்கரையில் சில பொழுது கழிந்ததே
உனக்குப் பிடித்த கானத்தைக்கேட்டொரு நாள் கலங்கினாயே
சூல் கனத்த பூனை ஆறுதலுக்காக உன் மடிகிடக்கவில்லையா
நரையோடித் தளர்ந்த மூதாட்டி தலை தொட்டு ஆசீர்வதிக்கவில்லையா

எதற்கு பயத்தை அணைத்தபடி திரிகிறாய்
விடைதெரியாததெல்லாம் கையில் வைத்துக்கொண்டு படபடக்கிறாய்
கண்முன்னே முறிந்து சரிந்தவை போல
முளைத்தெழுந்ததும் நடக்கவில்லையா
துக்கப்படவா சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம்

கசப்பேறிக்கிடக்கும் காய்களையெல்லாம் தூரப்போடு
உன் அசட்டுப் பேழையில் வைத்திருப்பதையெல்லாம்
கீழே கொட்டு
அதிசயமான காலங்களைக் கனவுகளாக்கித் தருகிறேன்
அதில் போட்டு வை
நீர்மை பருகிய நிலமாகி இளகு

நம் கையிலிருக்கும் தானியங்கள் சிறிதளவே
ஆனால், எத்தனை பேர் பசியை அது போக்கும் தெரியுமா

போ குழந்தமையோடு தூங்கப் போ
நாளை காலை நல்லொளியோடு இல்லம் வருவேன். ●

ரவிசுப்பிரமணியன் <ravisubramaniyan@gmail.com>

## சர்கார்

# கலைத்துவம் கலைக்கும் அலை

அ. ராமசாமி

பத்துப்பத்து நாட்கள் இடைவெளியில் புதுவரவுச் சினிமாக்களைப் பார்க்கும் வாய்ப்பை உருவாக்கிக் கொள்ள நேர்ந்துள்ளது.நேர்ந்துள்ளது என்பதைவிட நெருக்கடி உருவாக்கப்பட்டுள்ளது என்றே சொல்லவேண்டும். தானாக உருவாகவில்லை; தமிழ்ச் சினிமாவின் பரப்பு வெவ்வேறு சங்கங்களின் வழியாகத் தன்னை வடிவமைத்துக்கொள்ளத் தொடங்கியிருப்பதின் பின்னணியில் இந்த நெருக்கடி உருவாகியிருக்கிறது. எந்தவொரு சினிமாவையும் 'பார்க்க வேண்டிய சினிமா' என்ற எண்ணத்தை உருவாக்கிக்கொள்வதன் பின்னணியில் பல காரணிகள் இருக்கின்றன. அக்காரணிகள் அனைவருக்கும் பொதுவானதாக இருக்க வேண்டும் என்பதும் இல்லை. ஒவ்வொருவருக்கும் வெவ்வேறாக இருக்கின்றன.

### உச்சநிலை நடிகரின் விசிறிகள்

உச்சநிலை நடிகரின் விசிறியாக இருக்கும் ஒருவருக்கு அவரின் ஒவ்வொரு படத்தையும் முதல் நாள் முதல் காட்சி பார்க்கவேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது. இதற்கு முன்பு பார்த்த சினிமாவை விடவும் கூடுதலான தடவை பார்க்கவேண்டும் என்று ஆசை இருக்கிறது. அப்படிப் பார்க்கத் தூண்டும் காட்சிகள் புதிய படத்தில் இருக்கவேண்டும் என்ற வேண்டுதலும் இருக்கிறது. விருப்பம், ஆசை, வேண்டுதல் எனத் தொடரும் நடிகரின் விசிறி, சினிமாவிற்குச் சூட்டப்படும் பெயரிலிருந்தே உற்சாகம் கொள்கிறார். அந்தப் பெயரைத் தனது வேண்டுதலுக்குரிய நடிகர் எவ்வாறு உச்சரிக்கிறார் என்பதைக் காணும் ஆவலோடு முதல் நாள் முதற்காட்சிக்குத் தயாராகிறார். அவ்வாறே தானும் உச்சரித்து, நடித்துப் பார்க்க நினைக்கிறார். சர்காரின் வரவும் ரசிகர்களின் ஈடுபாடும் அதிலிருந்து விலகியதில்லை. சினிமா தயாராகும் நிலையிலிருந்து கிடைக்கும் தகவல்கள் அடிப்படையில், அந்தப் படம் வரும்போது பார்க்கவேண்டும் என்ற எண்ணம் உருவாகிவிடுகிறது என்பதுதான் கடந்தகால அனுபவம். ஆனால் அண்மைக்காலத்தில் முகநூலில் எழுதப்படும் முதற்காட்சி வர்ணனைகள் ஒரு சினிமாவைப் பார்க்கும்படி தூண்டுகின்றன என்பதையும் மறுப்பதற்கில்லை.சர்கார் படம் வெளியானதும் உருவான அரசியல் சர்ச்சைகளின் பின்னணியில் ஏ.ஆர். முருகதாஸ் உருவாக்கிய காட்சிகளும், காட்சிகளில் இடம்பெற்ற வசனங்களும் காரணங்களாக இருந்தன என்பதைப் பார்த்தவர்களின் கூற்றுகள் உறுதிசெய்தன. இத்தகைய வசனங்களுக்குப் பொறுப்பானவராக எழுத்தாளர் ஜெயமோகனே இருக்கக் கூடும் என்பதால் சர்காரையும் பார்க்க நேர்ந்தது.



### சர்கார்: சொல்லாடலின் அரசியல்

அரசாங்கம், அரசு என்ற சொல்லாட்சிகள்தான் தமிழர்கள் பயன்படுத்தவேண்டிய சொல்லாட்சி என நிலைநிறுத்தப் பெற்றுள்ளது. அந்நிலை நிறுத்தல் வரலாற்றில் தமிழ்நாட்டிலிருந்து விரட்டப்பெற்ற ஒரு சொல் சர்கார். இந்தி ஒழிக( அதன்மூலமான சம்ஸ்க்ருதமும்) எனப் பரப்புரைசெய்து விரட்டப்பட்ட - ஒரு சொல்லாட்சியைத் திரும்பவும் நிலைநிறுத்தும் நோக்கத்தோடு வைக்கப்பட்ட பெயர் 'சர்கார்'. அந்த சொல்லை நாயகன் சொல்லப்போகும் காட்சியை முன்னோட்டமாக்கித் தந்த இயக்குநருக்கு என்ன நோக்கம் என்ற கேள்வியோடு அந்தப் படத்தைப் பார்க்கும் ஆசை எனக்குள் உருவானது. இந்தி எதிர்ப்பு, சம்ஸ்க்ருத எதிர்ப்பு என்ற நிலைப்பாட்டில் உருவான திராவிட இயக்க அரசுகளை நீக்கிவிட்டுத் திரும்பவும் இவ்விரு மொழிகளையும் ஆதரிக்கப்போகும் 'சர்கார்' ஒன்றை உருவாக்கும் நோக்கம் இப்படத்தோடு தொடர்புடை தயாரிப்பு நிறுவனம்(சன் பிக்சர்ஸ்), இயக்குநர்(ஏ.ஆர். முருகதாஸ்) , நடிகர்(விஜய்) ஆகியவர்களுக்கு உண்டு? என்ற கேள்விக்கு உடனடியாகப் பதில் கொடுக்கத் தக்க சான்றுகள் எதுவும் இல்லை.

படத்தின் நாயக நடிகர் விஜய்க்கு முதல் அமைச்சராகும் ஆசை இருக்கிறது என்பதைவிட அவரது தந்தை எஸ்.ஏ. சந்திரசேகருக்குத் தன் மகனை முதல்வர் ஆக்கிப் பார்ப்பதற்கு ஆசையிருக்கிறது என்பது வெளிப்படை. ஆனால் அவர் உருவாக்க நினைக்கும் அரசு, இப்போதுள்ள 'அரசு'க்குப் பதிலாக "சர்கார்" ஆக இருக்கும் என்ற குறிப்புகள் எதுவும் இதுவரை வெளிப்படவில்லை. படத்தை இயக்கிய ஏ.ஆர். முருகதாஸ் 'சர்கார்வகை'ப்பட்ட சினிமாவை இப்போதுதான் இயக்கும் புதிய இயக்குநர் அல்ல. விஜயகாந்தை நடிக்க வைத்து 'ரமணா'வை இயக்கியதிலிருந்து இவ்வகைச் சூத்திரத்தைத் தனது வெற்றிச் சூத்திரமாக்கிக் கொண்டவர். படத்தைத் தயாரித்துள்ள சன் பிக்சர்ஸுக்கு 'சர்கார்' வேண்டும் 'அரசு' வேண்டாம் என்ற நிலைப்பாடு இருக்குமா? என்பது மிகப்பெரிய கேள்வி. தமிழின் பெயரால் அரசை உருவாக்கி சன் குழுமத்தைத் தமிழ்த் தேசிய



முதலாளித்துவக் குழுமங்களில் முதன்மையான ஒன்றாக்கிய திராவிட இயக்க அரசு வேண்டாம்; இந்தியத் தனத்தோடு கூடிய சர்கார் தான் வேண்டும் என்று நினைக்கிறார்கள் என்று இப்போது உறுதியாகச் சொல்ல முடியவில்லை. ஆனால் பணம் தான் எல்லாம் என நம்புபவர்கள் அந்நிறுவனத்தின் முதலாளிகள். அவர்களை வளர்த்தெடுத்ததமிழ்மொழி, அம்மொழி பேசுபவர்களின் தனித்த சிந்தனை, பண்பாட்டுத்தொகுதிகள், அவற்றில் ஏற்பன ஏற்றுத் தள்ளுவன தள்ளும் நவீனத்துவக் கொள்கை ஏற்பு போன்ற எல்லாம் பணம் சேர்ப்பதற்குப் பயன்படாது என்றால் கைவிட்டுவிட்டு நகர்ந்துவிடலாம் என்பதைச் செயல்மூலம் - செயல்பாடுகளின் வழி காட்டிக்கொண்டிருக்கும் அந்நிறுவனம் 'சர்கார்' என்ற வடமொழிச்சொல்லாட்சியைக் கொண்ட அரசை விரும்பினாலும் ஆச்சரியமில்லை. இந்த மூன்று பேரும்- நடிகர் விஜய், இயக்குநர் முருகதாஸ், தயாரிப்பாளர் கலாநிதி மாறன்- ஆகிய மூவரும் 'சர்கார்' தான் வேண்டும் என்ற விருப்பத்தை நேரடியாகக் காட்டிக்கொள்ளாதவர்கள். ஆனால் வசனம் எழுதிய ஜெயமோகன் நேரடியாக - வெளிப்படையாக இந்தியத்தன்மைகொண்ட 'சர்கார்' என்ற சொல்லாடலை - முழு அர்த்தத்தோடு தேவை எனச் சொல்பவர். அதே நேரத்தில் அந்தச் சொல்லின் தமிழ் வயச்சொல்லான சர்க்காருக்காகவும் வாதாடுபவர் என்பதும் உண்மை. இந்தியத்தனத்திற்குள் தமிழ்த்தனம் பேணப்படவேண்டும் என்பது அவரது நிலைப்பாடு என்பதை அவரது எழுத்துகளின் வழி அறிய முடியும்.

திரைப்பட வெளியீடு அல்லது திரையிடல் சார்ந்து உருவாகியுள்ள நெருக்கடி முழுமையும் வணிகம் சார்ந்த நெருக்கடி. சினிமாவின் உருவாக்கம், கருத்தியல் மற்றும் கலையியல் சார்ந்த முன்னெடுப்புகள், சினிமாவில் பங்காற்றும் படைப்பாக்கக் குழுவினர், தொழில் நுட்பத்துறையினர், உடல் உழைப்புத் தொழிலாளர் ஊதியப்பிரச்சினை போன்றவற்றிற்காக வரைமுறைகளை உருவாக்கிக் கொள்ளாமல், சினிமாவைப் பார்வையாளர்களுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும் 'வெளியீடுகள்/ திரையிடல்கள்' என்ற அளவில் ஒருவித வரைமுறைகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. அதன்மூலம் வாரந்தோறும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் படங்களை வெளியிடும் ஒழுங்கைக் கொண்டு வந்திருக்கிறது. இதன் வழியாகத் திரையரங்குகளுக்கும் பார்வையாளர்களுக்கும் ஒருவித நெருக்கடிகள் உருவாகியிருக்கின்றன. இவ்வகையான நெருக்கடிகள், வரன்முறைகளை உருவாக்கிச் சந்தைப்படுத்தும் எல்லாவகையான வணிகங்களிலும் இருக்கும் நெருக்கடிதான். இந்த நெருக்கடி மூலம் சினிமா தனது கலைத்துவக்கூறுகளைத் துறந்து வணிகநிலையை நோக்கி இன்னொரு பாய்ச்சலைச் செய்கிறது என்றே புரிந்து கொள்ள வேண்டும். நான் அப்படியே புரிந்துகொள்கிறேன்.அது குறித்துத் தனியாக விவாதிக்கலாம். இப்போது அண்மையில் பார்த்த சினிமாக்களின் கலைத்துவத்தைக் கலைக்கும் சர்காரின் வருகை குறித்துப் பேசலாம்.

### கலைத்துவத்தேடலின் வெளிப்பாடுகள்

அடுத்தடுத்துப் பார்த்த ஐந்து படங்களில் கடைசியாகப் பார்த்த சினிமா சர்கார். ஏ.ஆர்.

முருகதாஸ் இயக்கத்தில் விஜய் நடித்து வெளிவந்த அந்தப் படத்திற்கு எழுத்தாளர் ஜெயமோகன் வசனம் எழுதியுள்ளார். சர்காருக்கு முன்பு பார்த்த சினிமாவின் பெயர் இயக்குநர் வெற்றிமாறனின் வடசென்னை. வடசென்னைக்கு முன்னால் பார்த்த படம் 96. ப்ரவீன்குமார் என்ற புதியவரின் இயக்கத்தில் த்ரிஷா -விஜய்சேதுபதி நடித்த படம். அதற்கு முன்பு மாரி செல்வராஜ் இயக்கத்தில் வந்த பரியேறும் பெருமாள். அதிகமும் பிரபலமாக நடிக, நடிகையர்கள் நடித்த படம். இந்தத் தொடர்ச்சியின் முதல் புள்ளியான மேற்குத்தொடர்ச்சி மலையும் பிரபலமாகாத புதுமுகங்கள் நடித்த படமே.

சர்கார் அல்லாத - மேற்குத்தொடர்ச்சி மலை, பரியேறும் பெருமாள், 96, வடசென்னை ஆகிய- நான்கும் வெவ்வேறு பார்வையோடு வெவ்வேறு வகைப்பாட்டுத் தன்மையோடு வெளிப்பட்ட சினிமாக்கள். இந்நான்குக்கும் தமிழ்ச் சினிமாவில் முன்மாதிரிகளே இல்லையென்று சொல்ல முடியாவிட்டாலும் முழுமையான போலச்செய்தல் படங்கள் அல்ல. கலைத்தன்மையை உருவாக்க நினைத்துக் குறிப்பான வெளி அல்லது குறிப்பான காலம் என்பதைக் கட்டமைத்துக்கொண்டு நிகழ்வுகளின் சூழலை விவாதிக்கவும், பாத்திரங்களின் உணர்வுகளையும் மனப்போராட்டங்களையும் உருவாக்கிக் காட்டவும் முயன்ற படங்கள் அவை. தனித்துவமான உருவாக்க முறைமைகள், குறிப்பான சூழலில் வெளிப்படக்கூடிய உணர்ச்சிக் கோர்வைத் தொகுதிகளின் ஓர்மைகள், அவ்வோர்மைகளின் புறநிலைப் பொருத்தங்கள் ஆகியனவெல்லாம் சேர்ந்து அந்நான்கு படங்களுக்கான இலக்குப் பார்வையாளர்களையும், அவர்களிடம் உருவாக்க நினைத்த தாக்கத்தையும் முதன்மையாக முன்வைத்துள்ளன. அப்படங்கள் ஒவ்வொன்றும் முன்வைத்த உலகம் குறித்த - வாழ்க்கை குறித்த -பார்வை ஏதோ ஒருவிதத்தில் புறநிலையில் இருக்கும் சமூக நடப்போடு இணைந்து நிற்பன; அதனால் நிகழ்காலம் மீது விமரிசனங்களை எழுப்பவல்லன. ஆனால் சர்கார் அப்படியான ஒன்றாக இல்லாமல் நடப்பு சமூகத்தை அப்படியே தொடரும் எண்ணங்களுக்குத் துணைபோகும் தன்மையோடு இருக்கின்றது.

### சர்கார் என்னும் சகலகலா வல்லவன்

மையக்கதாபாத்திரம் பேசும் வசனங்களின் வழித் தீவிரமான அரசியல் விமரிசனத்தையும் மாற்று அரசியலை உருவாக்கப்போகும் தலைவர் ஒருவரின் வருகையை முன்னறிவிக்கும் படமாகவும் பேசப்பட்ட சர்கார் படம், இருப்பைத் தக்கவைக்கும் படம் எனச் சொல்வது விதண்டாவாதமாகத் தோன்றலாம். ஆனால் அதன் உருவாக்க முறைமையும், விவாதப்பொருளும் இருப்பை நீட்டிக்கும் எண்ணம் கொண்டவை என்பதை உறுதியாகச் சொல்லமுடியும். அதில் பின்பற்றப்பட்டுள்ள பார்வையாளர் கோட்பாட்டு உத்தி ஒன்று இதனைச் செய்கிறது.

தமிழ்ச் சினிமாவிற்குள் இயங்கும் முதல் வரிசை உச்ச நடிகர்களுள் ஒருவரான விஜய் நடித்து வெளிவந்துள்ள சர்கார் வெகுமக்கள் ரசனைக்கான படம். அவ்வகைப்படங்கள் ஒவ்வொரு நடிகரின்


திரைப்பட இயக்குநர் ஏ.ஆர். முருகதாஸ்

ரசிகர்களால் முண்டியடித்துப் பார்க்கப்படும் என்பது தமிழ்/ இந்திய சினிமாக்களின் இயங்குநிலை. சர்கார் படத்தையும் விஜயின் ரசிகர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட தடவை பார்க்கவே செய்கிறார்கள். இந்தப் படத்தைப் பார்த்தது போலவே அவரது முந்தைய படங்களான மெர்சலை, துப்பாக்கியை, கத்தியை, கில்லியைக் கடந்த 10 ஆண்டுகளாகப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். அவரது படங்களைப் பார்ப்பதுபோல ரஜினிகாந்தின் படங்களைப் பார்க்கவும், அஜித்குமாரின் படங்களைப் பார்க்கவும், கமல்ஹாசன் படங்களைப் பார்க்கவும் தனித்தனியாக விசிறிகள் கூட்டம் தமிழ்நாட்டில் இருக்கவே செய்கின்றன. இந்நால்வரைத் தவிர தனுஷுக்கும் சூர்யாவிற்கும் விக்ரமிற்கும் கூட்டங்கள் இருக்கவே செய்கின்றன. இவ்வகையான கூட்டத்திற்கான கலவையைக் கொண்டு இந்த நடிகர்களை வைத்து இயக்கிட இயக்குநர்களும் தொடர்ந்து வேலை செய்து கொண்டே இருப்பதும் தமிழ்ச் சினிமாவின் வணிகப்பரப்பிற்குள்ளும் தயாரிப்புப் பரப்பிற்குள்ளும் படைப்பாக்க நடைமுறைகளுக்குள்ளும் நடந்து கொண்டே தான் இருக்கிறது. அதன் நீண்ட கால வரலாற்றின் முழு இயக்கமும் அதுதான். ஆனால் சில நேரங்களில் அதற்குள் நுழையும் சிலரால் இப்போக்குக்கு எதிரான பயணங்களும் முன்னெடுக்கப்பட்டுள்ளன. அம்முன்னெடுப்புகளைச் செய்தவர்கள் பெரும்பாலும் இயக்குநர்களாகவே இருந்தார்கள்; இருக்கிறார்கள். சகலகலா வல்லவன் என்னும் வணிகத் திருப்புமுனைப் படத்தின் வருகைக்கு முன்பு மகேந்திரன், பாலுமகேந்திரா, ருத்ரையா, தொடக்ககால பாரதிராஜா போன்றவர்களின் முயற்சிகள் தமிழில் ஒரு புதிய அலையாக - பெரும் லாப நோக்கத்தைக் கொண்ட வெகுமக்கள் திரளின் ரசனையைத் திசைதிருப்பம் சினிமாவைத் தந்ததை இப்போது நினைவு படுத்திக்கொள்ள வேண்டும். அதுபோன்றதொரு அலையை சர்கார் வருவதற்கு முன்பு வந்த சில படங்கள் உருவாக்கியுள்ளன என்பதையும் இணைத்துப் பார்க்கவேண்டும்.


வசனகர்த்தா ஜெயமோகன்

உச்சநிலையை நோக்கும் நகரும் நடிகர்கள், அவர்களை வைத்து வணிக வெற்றியை நோக்கிப் படம் எடுக்கும் இந்தக் கூட்டத்தினரால் பரியேறும் பெருமாள் போன்ற இந்திய சமூக அமைப்பின் சரித்திரத்தின் ஆறாத காயமாகவும் சிலநேரங்களில் வடுவாகவும் தோன்றும் சாதீய விமரிசனப் படத்தைத் தரமுடியாது. குறிப்பான நிலவெளியில் குறிப்பிட்ட தொழில் செய்யும் - மீனவர்களின் - உள்முரணையும் புறநெருக்கடிகளையும் விவாதிக்கும் வடசென்னை போன்ற நிகழ்காலச் சிக்கலைப் பேசும் ஒரு சினிமாவை நினைத்துப் பார்க்கமுடியாது. பள்ளிப்பருவக் காதலை - அதன் நினைவலைகளைச் சுமக்கும் தனிமனிதர்களின் துயரார்ந்த மனப்பதிவுகளின் சுவடுகளை வரிசைப்படுத்தித் தரமான வெளிப்பாடாகத் தரமுடியாது. நிகழ்காலப் பொருளியல் முறையினால் சுரண்டடப்படும் ஓர் அப்பாவியின் சிதைக்கப்படும் கனவை -அவனது வாழ்நிலையின் சூழலோடு சேர்த்து விவாதிக்கும் மேற்குத்தொடர்ச்சி மலை போன்ற ஒரு சினிமாவைக் கற்பனை செய்து பார்க்கவும் தயாராக இருக்க மாட்டார்கள் வணிக சினிமாவின் இயக்குநர்களும் உச்சநடிகர்களும்.

ஏ.ஆர். முருகதாஸ் + விஜய் கூட்டணியில் ஏற்கெனவே எடுக்கப்பட்ட படங்களின் இன்னொரு நகலே சர்கார் என்றாலும் இந்தப் படத்தில் எழுத்தாளர் ஜெயமோகனின் இருப்பும் வசனங்களும் கூடுதலான கவனத்தைப் பெற்றுள்ளது என்பதை மறுப்பதற்கில்லை. அவரது இருப்பினால் சில வித்தியாசங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. முதல் வித்தியாசம் நிகழ்கால அரசியலோடு நேரடித் தொடர்புடைய காட்சிகளையும் வசனங்களையும் பாத்திரங்களையும் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு முந்திய மெர்சல் போன்ற கத்தி, துப்பாக்கி படங்களில் சமூகத்தின் ஏதோ ஒரு தரப்பு மனிதன் தனது வாழ்க்கைச் சூழலில் பாதிக்கப்படும்போது கிளம்பும் ஆத்திரத்தில் அல்லது மகிழ்ச்சியில் சொல்லும் கோப வசனமாகவோ, நகைச்சுவைத்துணுக்காகவோ அரசியல் வசனங்கள் இடம்பெற்றன. ஆனால் இப்பட த்தின் அரசியல் வசனங்கள் அரசியல் பேசவேண்டிய பாத்திரங்களின் வழி முழுப் புரிதலுடன் பேசவைக்கப்பட்டுள்ளன.

இந்திய/ தமிழகத் தேர்தல் அரசியலில் வாக்களிக்கும் முறையில் இருக்கும் - வாக்காளர்களின் இடத்தைத் திருடிவிடும் ஒற்றைக் கூறொன்றை- கள்ளவோட்டுப் போடுதலைக் கதைசொல்வதற்குரிய முன்வைப்பாக எடுத்துக்கொண்டு மொத்தப் படமும் கட்டமைக்கப்பட்டுள்ளது. நடைமுறையில் இதுவெல்லாம் சாத்தியமா? என்ற கேள்வியை எழுப்பிப் பதிலைத் தேடவிடாமல் விறுவிறுப்பான காட்சிகளைச் சுட்டுக்களின் வழியாகவும், நிரல்படுத்துதலின் வழியாகவும் புனைவுக்காட்சிகள் உருவாக்கப்பட்டுள்ளன. இந்த வேகமும் விறுவிறுப்பும் உண்டாகக் காரணமாக இருப்பது படத்தின் மிகக்குறைவான - நாட்கணக்கிலான நிகழ்வுக்காலம் என்றுகூடச் சொல்லலாம்.

மாறிமாறித் தமிழகத்தின் ஆளுங்கட்சிகளாக இருக்கும் தி.மு.க., அ.இ.அ.தி.மு.க., இரண்டிலிருந்தும் நபர்களின் செயல்பாடுகள் மற்றும் உருவ அடையாளங்களைப் பிசைந்து உருவாக்கப்பட்டுள்ள பாத்திரங்களை எதிரிணையாக வைத்துக்கொண்டு நாயகன் மோதிச் சிதைக்கிறான். அந்தச் சிதைவுக்குப் பின் அவன் உருவாக்க நினைக்கும் சர்கார் இப்போதுள்ள தேர்தல் அரசியலில் வழியில் நினைவளவில்கூடச் சாத்தியமற்ற ஒன்று. என் ஜி ஓ. அரசியல் என்று வரையறை செய்யப்படும் அதன் இயங்கியல் அளவிலேயே அரசுக்கெதிரானது. பேரமைப்புக்கெதிராகச் செயல்படும் நபர்களைக் கொண்டு உருவாக்கப்படும் சர்கார் என்பதைப்படம் முன்வைக்கிறது. இந்தக் கருத்தியல் இயக்குநர் முருகதாஸின் சிந்தனையில் உருவானதாக இருக்கலாம். வசனகர்த்தா ஜெயமோகனுக்கு உடன்பாடானது எனச் சொல்ல முடியாது. ஆனால் அவருக்கு உடன்பாடான வேறு சில காட்சிகளும், அவரது வசனங்களைப் பேசும் விதமான பாத்திரங்களும் உருவாக்கப்பட்டுள்ளன. அவரும் இணைந்தே உருவாக்கியிருக்கிறார் என்றும் சொல்லலாம். இந்த இடத்தில் முன்னர் குறிப்பிட்ட விலக்கல் உத்தி செயல்பட்டுள்ள விதத்தை விலக்கிவிடலாம்.

### உருவாக்கிச் சிதைக்கும் உத்தி

கனடாவிலிருந்து வாக்களிப்பதற்காகத் திருவல்லிக்கேணி பள்ளிக்கூடத்திற்கு நேரடியாக வரும் சுந்தர்ராமசாமியின் கார்பரேட் கிரிமினல் தனமான புத்திசாலித்தனத்தைச் சொல்ல அவரோடு நேரடியான தொடர்பற்றவர்கள் வந்துபோகும் பாத்திரங்களாக உருவாக்கப்பட்டிருக்கிறார்கள். அவரது பிடிவாதம், காதல் ஈடுபாடு போன்றவற்றைச் சொல்ல அவரது குடும்பத்தினரின் கூற்றுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் அவரது படிப்பு, அறிவு, ஏழ்மையான பழைய வாழ்க்கை மற்றும் முன்னேற்றம் போன்றன உரையாடல்களாலும் தனிமொழிப் பேச்சுகளாலும் நிகழ்த்தப்படுகின்றன. தக்காளிக்குப் பின்னால் இருக்கும் கிரிமினல் கதையை உரையாடலாக அவரே சொல்கிறார்.

ஆனால் மீனவக்குடும்பத்தில் பிறந்தது தந்தையை இழந்து, குடும்பத்தினரின் சுமையைச் சுமந்து படித்து முன்னேறிய பழைய கதையை உணர்ச்சிச் செறிவுமிக்க ஓர் தனிமொழியாகப் பெருங்கூட்டத்தின் முன் நிகழ்த்துகிறார். தனிமொழியின் வழியாக உருவாக்கப்படும் துயரமும் வலியும் சரி, பெருமிதக் கொந்தளிப்பும்சரி முன்னால் உள்ள கூட்டத்தைச் செயல்படத்தூண்டும் இயல்புடையன. உலக அளவில் சிறந்த பேச்சாளர்களாக அறியப்படும் தனிநபர்களும் அரசியல் ஆளுமைகளும் இவ்வுத்தியைக் கவனமாகப் பயன்படுத்துவர். இந்தப் படத்திலும் ஆங்காங்கே கண்களில் கண்ணை வரவழைக்கும் தனிமொழிகள் சொந்த வாழ்க்கையின் தனிமொழியாக இல்லாமல் சமூக நடப்பின் வழியாகப் பாதிப்புக்குள்ளான ஒரு கூட்டத்தின் உறுப்பினன் ஒருவனின் பாதிப்பாக நிகழ்த்தப்படுகிறது.



இந்தியப் பெருங்கடலில் அந்நியப்படைகளால் கொல்லப்படும் மீனவக்குடும்ப உறுப்பினனாக நாயகனாக நிறுத்திக் கண்ணீரை வரவழைக்கும் காட்சிக்கு இணையாக இன்னொரு காட்சி உருவாக்கப்பட்டுள்ளது. ஆட்சியர் அலுவலகத்தில் கந்துவட்டியைக் கட்ட முடியாமல் குடும்பத்தோடு தீவைத்துக் கொழுத்திக் கொண்ட குடும்பம் குறித்த நடப்பு நிகழ்வு சித்திரிக்கப்படுகிறது. அந்நிகழ்வு கூட்டத்தினரிடம் கண்ணீர் வரவழைப்பதாக அமைக்கப்படாமல் நாயகனின் கண்களின் வழியும் கண்ணீர் வழியாக அவனது இரக்கக்குணம் முன்வைக்கப்படுகிறது. இவ்வகைக் காட்சிகள் எல்லாம் படத்திற்குள் இருக்கும் கூட்டத்தினரிடம் உண்டாக்கும் உணர்வுக்கு இணையாகச் சினிமாவைப் பார்க்கும் பார்வையாளத்திரளை படத்தோடு ஒன்றிணையச் செய்யும் நோக்கம் கொண்டன. காட்சியில் உருவாக்கப்படும் சோகத்தையும் துயரத்தையும் பார்வையாளத்திரளுக்குக் கடத்திச் செயல்படத்தூண்டும் என்பதையும் மறுக்கமுடியாது. ஆனால் ஏ.ஆர். முருகதாஸ் இவ்வுணர்வுக் கொந்தளிப்புகளை உருவாக்கி உடனடியாக உடைத்து எதிர்நிலைக்குள் தள்ளிவிடுகிறார். உணர்ச்சிமயமான ஒரு சொற்பொழிவுக்குப் பின்னால் அர்த்தமில்லாத சொற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட பாடலும் அதற்கான ஆட்டமும் உருவாக்கப்பட்ட துயர மனநிலையிலிருந்து விலக்கிக் களிப்பு மனநிலைக்குள் தள்ளுகிறது.

ஆளுங்கட்சி நடத்தும் சதியாலோசனைகளையும் அதிகார மீறல்களையும் விலக்கிப் பேசிவிட்டுப் பெருங்கூட்டமாக மோட்டார்ச் சைக்கிள்களில் செல்லும் இளைஞர்களை நிழலாக நிறுத்திவிட்டுத் தான் மட்டும் மேடையேறிக் கலாய்த்துப் பேசும் காட்சிகளில் வெளிப்படும் வசனங்களில் வெளிப்படும் எள்ளல் தொனி பார்வையாளர்களைக் காட்சியிலிருந்து விலக்கிவைத்து நடிகர் விஜயின் உடல் மொழியை ரசிக்கும் ரசிக மனநிலைக்குள் தள்ளிவிடுகிறது. இத்தகைய காட்சிகள் படம் முழுக்க நிரல்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் பார்வையாளர்களைப் படத்தோடு இணைத்துவிட்டு உடனடியாக விலக்கியும் விடுகின்றன. இந்த உத்தியை இயக்குநர் ஏ.ஆர். முருகதாஸ் திட்டமிட்டே செய்கிறார். அதன் மூலம் தனது சினிமா கொண்டாட்டமும் களியாட்டமும் - ஆடலும் பாடலும் ரத்தம் தெறிக்கும் சண்டைக்காட்சிகளும் தூக்கலாகக் கலந்து தரும் வெகுமக்கள் சினிமா ரசனைக்குள் இருக்கும் ஒன்று என்பதாகவே தரவிரும்புகிறார். படத்தின் ஆங்காங்கே உருவாக்கப்படும் துன்பியலின் மிதப்புகள் உடைந்துபோகும் குமிழிகளாக மட்டுமே இருக்கவேண்டும் என்பது வெகுமக்கள் சினிமா சூத்திரங்களில் ஒன்று. அதனையும் சரியாகவே செய்திருக்கிறார் முருகதாஸ். இதன் மூலம் புறநிலை அரசியல் மீதோ, சமூக நடப்புகளின் மீதோ படம் எழுப்பும் விமரிசனங்களை ஏற்றுப் பார்வையாளர்கள் செயல்பட வேண்டும் என்பதற்குப் பதிலாகப் படத்தைப் பார்த்துவிட்டுக் களிப்புடன் போனால் போதும் என்பதே அவரது எதிர்பார்ப்பு. இருப்பைப் பேசுவதென்பது மாற்றுவதற்கல்ல; பொழுதுபோக்குகளில் ஒன்றாக - விற்பனைச் சரக்குகளில் ஒன்றாக மாற்றுவது மட்டுமே அவரது நோக்கம். இதற்கு ஜெயமோகனின் புத்திசாலித்தனமான வசனங்களும் பயன்பட்டுள்ளன.

பொதுவாகத் தமிழ்ச் சினிமாவை வணிகப்பண்டமாக மட்டுமே பார்ப்பவர்கள் முழுப் படத்தின் வடிவத்தையும் எழுதிமுடித்துக்கொண்டு படப்பிடிப்பைத் தொடங்குவதில்லை. முழுவடிவத்தை எழுதி முடிப்பவர்கள்கூட அதனை உதவி இயக்குநர்களிடமோ, நடிக்கும் நடிகர்களிடமோ காண்பித்து விவாதிப்பதில்லை. அனைவரும் பங்கேற்று உருவாக்கும் கூட்டு உருவாக்கத்தில்

நம்பிக்கை கிடையாது. இயக்குநரின் முழுச்சொத்தாக மட்டுமே படத்தின் ஆக்கம் நினைக்கப்படுகிறது. சில இயக்குநர்கள் படத்திற்குத் தேவையான காட்சிகளைத் தாண்டியும் எடுத்துக் கொண்டுவந்து படக்கோர்பு (எடிட்டிங்) நிலையில் தங்கள் திரைக்கதையை உருவாக்கவும் செய்கிறார்கள். இதற்குப் பின்னால் இயக்குநர்களின் வேலைபாணி இருப்பதோடு "ரகசியம் காத்தல்" என்ற கூறும் உள்ளது. படத்தை இயக்கியுள்ள ஏ.ஆர்.முருகதாஸ் உருவாக்கும் காட்சிகளை அப்படத்தில் இணைந்து வேலை செய்யும் உதவி இயக்குநருக்கோ, நடிகர்களுக்கோ சொல்லியிருக்க வாய்ப்பில்லை என்பதை அப்படத்தில் பணியாற்றிய பலரது நேர்காணலில் (பழ.கருப்பையாவின் தொலைக்காட்சி நேர்காணல்) காணமுடிந்தது. படம் எழுப்பும் உணர்வுகள் இப்படிச் சிதைக்கப்படும்; திசைதிருப்பப்படும் என்பதைப் படத்திற்கு வசனம் எழுதும் எழுத்தாளர்களுக்கு இயக்குநர்கள் சொல்வதும் இல்லை. அது தெரிந்திருந்தால் ஒருவேளை அவர்கள் இத்தகைய படங்களில் வேலை செய்யாமல் விலகிக்கொள்ளவும் கூடும். ஏனென்றால் இதுவரை வணிக சினிமாவிற்கு வசனம் எழுதியுள்ள நவீன எழுத்தாளர்களான எஸ்.ராமகிருஷ்ணன், ஜெயமோகன், நாஞ்சில் நாடன் போன்றவர்கள் அவர்களின் புனைவெழுத்துகளில் இத்தகைய உத்திகளையும் எழுத்துமுறைகளையும் மேற்கொண்டவர்கள் அல்ல. ஆனால் எழுத்தாளர் சுஜாதாவின் புனைவெழுத்துகள் உடன்பட்டுப் போகும் புனைவெழுத்துப் பாணி. அவர் அறிந்தே தமிழ்ச் சினிமாவின் வணிகத்திற்கு உதவினார். மற்றவர்கள் எழுத்திற்கு ஒரு முகத்தையும் சினிமாவிற்கு வேறொரு முகத்தையும் தயாரித்து வைத்துள்ளனர். ●

"அ. ராமசாமி" <ramasamytamil@gmail.com>

# நிலாக்குளம்

ரவிக்குமார்

ஓவியம்: Aabru

அவன் தலைக்குள்ளிருந்து பட்டாம்பூச்சிகள் ஒவ்வொன்றாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. மூடியிருந்த இமைகளுக்குள் கண்கள் அலைந்து கொண்டிருந்தன. உதட்டிலிருந்து முறுவல் மெல்லிய புகைபோல கசிந்து முகத்தில் ஒளியேற்றிக் கொண்டிருந்தது. “அவனுக்கு அருகில் போகாதே, அவன் கனவுகண்டு கொண்டிருக்கிறான்” என கிசுகிசுப்பான குரலில் எச்சரித்துவிட்டு மேகத்தை நூற்றுக் கொண்டிருந்தாள் அவனது அம்மா. நான் அவளுக்கு உதவியாக அருகில் அமர்ந்து நூலுக்கு வண்ணம் தீட்டத் தொடங்கினேன். கண்ணிலிருந்து நீல வண்ணத்தை எடுத்து ஒரு பாத்திரத்தில் இட்டேன். கூந்தலைக் கசக்கி கறுப்பு வண்ணத்தை ஒரு பாத்திரத்தில் பெய்தேன். உதட்டைச் சுழித்து சிவப்பு வண்ணத்தை உமிழ்ந்தேன். அப்போது என் முன்னே பறந்துவந்த ஒரு பட்டாம்பூச்சி மார்பில் அமர்ந்தது. அதைப் பிடிக்கலாம் என விரல்களைக் குவித்தபோது எனக்குள் சென்று ஒளிந்துகொண்டது. அந்த கணத்தில் அவன் கண்களைத் திறந்தான். என்னைப் பார்த்தான். நான் ஒரு பூவாய் மாறி மேலெழுந்து மிதக்கத் தொடங்கினேன். அவனது அம்மா நூற்பதை நிறுத்திவிட்டு என்னைப் பார்த்து சிரிப்பது தெரிந்தது.

வியர்வை கசியும் கழுத்துக்குள் அவன் முகம் புதைத்திருந்தான். பாலருந்திய திளைப்பில் உறங்கும் குழந்தையைப்போல மூச்சு இழைந்து கொண்டிருந்தது. ஜன்னல் வழியாக வீசிய காற்று முகத்தை உலர்த்தி குளிரச் செய்தது. சருமமெங்கும் இளஞ்சூடு பரவியது. அதை அவனுக்குக் கடத்தி ஒத்தடம் தந்தேன். வாசல் பக்கமிருந்த வேப்ப மரத்திலிருந்து உலர்ந்த இலைகள் கொட்டுவது மழைபெய்வதைப்போலக் கேட்டது. நெடுஞ்சாலையில் ஆம்புலன்ஸ் போவதை அதன் அலறலிலிருந்து உணர முடிந்தது. அந்த சப்தம் யாரோ ஒருத்தரின் வாழ்வுக்கும் மரணத்துக்கும் இடையில் ஒரு கயிறாக ஊசலாடியபடி செல்வதாகத் தோன்றியது. அவனது தலையை இன்னும் இறுக்கமாக எனக்குள் புதைத்துக்கொண்டேன். கண்ணீர் கன்னத்தில் கோடாக இறங்கியது.



அவனுக்கு ஊர்முழுக்க உறவு, நிஜத்தில் யாருமற்ற அனாதை. அவனை நான் தேடிக் கண்டுபிடித்தேனா அல்லது அவன்தான் என்னைக் கண்டடைந்தானா என்று தெளிவாகக் கூறமுடியவில்லை. ஒரு திருவிழா நெரிசலில் அவனைக் கடந்து போனதாக நினைவு. பின்னர் ஒரு மழை நாளில் திரும்பவும் பார்க்க நேர்ந்தது. நீண்டகாலமாகப் பழகியவன்போல் கேலி ததும்பப் பேசினான். நானும் சரிக்கு சரியாகப் பதில் சொல்லிக்கொண்டிருந்தேன். ஆனால், அந்த உரையாடலுக்கு அப்பால் நாங்கள் வேறு எதையோ பேசிக்கொண்டிருந்தோம். அந்த உரையாடல் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருப்பதற்கு நாங்கள் ஏற்படுத்திக்கொண்ட காரணம்தான் என்பது புரிந்தது. கவிதை நூல் ஒன்றை அவனுக்குப் பரிசளித்தேன். அவன் அலட்சியமாக அதை வாங்கிய விதத்தில் ஒரு நடிப்பு இருந்தது.அவன் புறப்பட்டுவிட்டான். நானும் வீட்டுக்குத் திரும்பி நடக்கத் தொடங்கினேன். வழியெங்கும் திடீரென்று கருங்கல் ஜல்லிகளைப் பரப்பி வைத்ததுபோல நடக்கவே சிரமமாக இருந்தது. அவன்மீது ஏனோ இனந்தெரியாத கோபம் உண்டானது. என்ன உரிமையில் கேலி செய்தான்? எப்படி அதற்கு இடம் கொடுத்தோம். எந்த நம்பிக்கையில் தொலைப்பேசி எண்ணை எழுதித் தந்தோம் என என்மீதே ஆத்திரமாக வந்தது. அவமானத்தில் கண்கள் கலங்குவதை உணர்ந்தேன்.

மழைக்காலம் என்றாலே எனக்குப் பிடிக்காது. தனிமை பெருகி அழுகையாக வரும். அம்மா இருந்தால் கேட்காமலேயே தேநீர் போட்டுத் தருவார். என் அழுகையைப் புரிந்துகொண்டதுபோல அருகில் அமர்ந்து என் தலையைக் கோதுவார். இப்போதும் ஒரு தேநீர் குடிக்கவேண்டும்போலத் தோன்றியது. ஆனால், அதைத் தயாரிக்க முடியுமா என்ற சந்தேகம். குப்புறப் படுத்து கண்களை மூடிக்கொண்டேன். அவன் பயணித்தபடி எனது கவிதைப் புத்தகத்தைத் திறந்து படித்துக் கொண்டிருக்கிறான். எந்தெந்த கவிதைகள் அவனுக்குப் பிடிக்கும் என்பதை மனம் அடையாளப்படுத்திக்கொண்டே வருகிறது.

‘உச்சரிக்கும்போதெல்லாம் மனதைக் கழுவுகிறதுன் பெயர்’ என்ற வரியை வாசிக்கும்போது அவனது முகம் எப்படி மலரும் என்பதை கற்பனை செய்ய முடிந்தது. நினைத்ததுபோலவே தொலைப்பேசி ஒலித்தது. அவன்தான் என்பது எண்ணைப் பார்க்காமலேயே தெரிந்தது. பெரிய யுத்தத்தில் வென்றுவிட்ட திமிரோடு போனை எடுத்தேன். நான், ‘ஹலோ’ என விளிப்பதற்கு முன்பாகவே எதிர்முனையில் அவன் பேசத் தொடங்கியிருந்தான்.

“நேசம் என்பது இருவருக்கிடையிலான உறவு அல்ல. அது இரண்டு பிரபஞ்சங்கள் உருகிக் கலப்பது” என அவன் அதே கவிதையை வாசிக்கத் தொடங்கினான். மழை நீர் தெருவில்



கால்வாய்போலப் பெருக்கெடுத்து ஓடியது.

வாசலில் இருக்கும் மாமரத்தை வைத்து அவன் வருகையை மனம் சரியாகக் கணித்துவிடும். இலைகள் சலசலத்தால் அவன் வருவான், விழித்ததும் கொழுந்து இலை தென்பட்டால் அவன் வருவான், பிஞ்சுகள் கொட்டிக் கிடந்தால் அவன் வருவான். அதை ஒருநாள் அவனிடம் சொன்னபோது தனது அனுபவத்தைச் சொன்னான். வெயிலின் நிறத்தையும், மேகங்களின் போக்கையும் வைத்து என்னை சந்திக்கவரும் நாளைத் தீர்மானிப்பானாம்.

அவன் தேதிகளை நினைவில் வைத்திருப்பது வியப்பாக இருக்கும். 'அந்த தேநீர்க் கடையில் இந்த தேதியில் நாம் தேநீர் குடித்தோம்; அப்போது இந்த திசையைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தாய்' என்பான். ஒரு தேதியைச் சொல்லி அப்போது நிகழ்ந்த உரையாடலை நினைவுகூர்வான். சந்தித்துக்கொண்ட ஒவ்வொரு தேதியையும் வரலாற்றில் பதிய வைத்துவிட வேண்டும் என்பதுபோல அந்தத் தேதிகளில் ஏதாவது ஒன்றைச் செய்வது அவன் வழக்கம். என் பிறந்தநாள் ஒன்றின்போது ஒரு நோட்டுப் புத்தகத்தைத் தந்தான். அது கையால் தயாரிக்கப்பட்ட காகிதத்தைக்கொண்டு உருவாக்கப்பட்டிருந்தது. திறந்தேன். நிலாக்குளம் என முதல் பக்கத்தில் எழுதப்பட்டிருந்தது. புரட்டினேன், சிறிதும் பெரிதுமாக இருபத்தைந்து கவிதைகள். ஒரே இரவில் எழுதப்பட்டவை. எல்லாம் என்னைப் பற்றிய கவிதைகள். 'என் பிரார்த்தனைகளில் மௌனமாகவும் முறைப்பாடுகளில் கண்ணீராகவும் இருக்கிறாய் நீ' என முடிந்தது ஒரு கவிதை.

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒரு இடத்துக்கு இன்று போகப்போகிறோம் எனப் புதிர்போட்டுவிட்டு என்னை ஒரு ஊருக்கு அழைத்துச் சென்றான். பழமைவாய்ந்த கோயிலாக இருக்கும் என எண்ணியபடி நான் போனேன். ஆனால், அதுவொரு மாட்டுச் சந்தை. விதவிதமான மாடுகள், ஆயிரத்துக்குமேல் இருக்கும். அந்த சந்தை முன்னூறு ஆண்டுகளுக்கும் மேலாக அங்கு வாரந்தோறும் கூடுகிறதாம். அங்கிருந்த மாடுகளைப் பற்றி ஒவ்வொன்றாக எனக்கு விவரித்தான். எனக்கோ சரியான கோபம். இவன் என்ன மாட்டுத் தரகனாக இருந்தானா? எதற்கு இதையெல்லாம் தெரிந்து வைத்திருக்கிறான்? என நினைத்தபடி ஒரு மரத்தடியில் இருந்த சர்பத் கடைக்கருகில் போய் நின்றுகொண்டேன். "பிடிக்கலையா" என்றவனிடம், "ஒரு பெண்ணை மாட்டு சந்தைக்கு அழைத்துப்போகும் ஒருவனை இப்போதுதான் நான் பார்க்கிறேன்" என்றேன்.

"உன்னை அழைத்து வந்ததே இந்தப் பின்னணியில் உன்னைப் படம் எடுப்பதற்காகத்தான்" என்றபடி காமிராவை எடுத்துக்கொண்டு என்னை மாடுகளுக்கிடையில் அழைத்துச்சென்றான். 'அப்படி நில் இப்படி பார்' என எதுவும் சொல்லவில்லை. ஆனால், காமிராவின் ஷட்டர் திறந்து மூடும் சப்தம் மட்டும் கேட்டுக்கொண்டேயிருந்தது. இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு காரின் டிக்கி நிறைய பெரிய

பெரிய ஃப்ரேம் போட்ட எனது படங்களோடு அவன் வந்து நின்றான். அந்தப் படங்களைப் பார்த்தபோது எனக்கே பிரமிப்பாக இருந்தது.

அவன் பேசுவதைக் கேட்கும்போது ஏதோ மொழிபெயர்ப்பு நூலை வாசிப்பது போல இருக்கும். அந்த மொழியின் அன்னியத்தனம் வசீகரிக்கும். அவன் பேசுவதை வைத்து அவன் எந்தப் பகுதியைச் சேர்ந்தவன் எனக் கண்டுபிடிக்க முடியாது. வெவ்வேறு பகுதிகளில் புழங்கும் வட்டார வழக்குகள் கலந்து வெளிப்படும்.

அவனை சந்தித்ததற்குப் பிறகு என் தேடல் முற்றுப்பெற்றுவிட்டதுபோலத் தோன்றியது. மற்றவர்களிடம் பேசுவதே குறைந்துபோனது. ஆனால், ஒவ்வொருநாளும் என் உலகத்தின் எல்லையை விரிவடையச்செய்துகொண்டே இருந்தான். "உனக்கென்ன ஆச்சி நீ ஒரு மகாராணி மாதிரி இருப்ப" என்று தாத்தா சொன்ன வார்த்தைகள் பலித்துவிட்டது. அவன் ராஜாவாக இல்லை, ராச்சியமாக இருந்தான்.

நினைவுகளில் ஆழ்ந்ததில் இறுக்கம் சற்றே தளர்ந்திருக்கவேண்டும். அவன் கழுத்தை இன்னும் நெருக்கமாக இழுத்து அணைத்துக்கொண்டான். இன்று மருத்துவர் என்னைத் தனியே அழைத்து சொன்ன வார்த்தைகள் ஆம்புலன்ஸின் அலறலாக என்னை விரட்டிக்கொண்டிருந்தன. ஏன் இவனை நான் சந்திக்கவேண்டும்? சாவின் வாயிற்படியில் நிற்பவன் எதற்காக எனது கண்ணில் படவேண்டும்?

காற்றில் மிதந்து மிதந்து போய்க்கொண்டே இருந்தேன். மேகத்துக்கு மேலே அதற்கும் மேலே. இங்குதானே தேவதைகள் இருப்பதாக சொல்வார்கள்; யாராவது தென்படுகிறார்களா எனத் தவிப்புடன் தேடினேன். எல்லாம் வெறும் கற்பனை என்ற நினைவு வந்தாலும் அதை ஒதுக்கிவிட்டு அரற்றினேன். "மலைபோல வந்தாலும் பனிபோல விலகிடணும் தாயே!" என்று மன்றாடினேன். இந்தப் பிள்ளையை என்னிடமிருந்து பறித்துக்கொண்டுவிடாதே எனக் கையேந்தினேன்.

அவன் தூக்கத்தில் முனகினான். உறக்கத்திலேயே பிதற்றினான். "நான் அவ்வளவு சீக்கிரம் செத்துட மாட்டேன். செத்துடக்கூடாது. உனக்கு செய்யவேண்டியது நிறைய இருக்கு" என்று முனகினான். நள்ளிரவு தாண்டிய அந்த நேரத்தில் அதுவரை தேக்கிவைத்திருந்த ஆற்றாமை

அத்தனையும் உடைத்துக்கொண்டு பீறிட்டது. "ஏய்! உனக்கு ஒண்ணும் ஆகாதுடா, என் பிள்ளைடா நீ " என்று கதறத் தொடங்கினேன். நெடுஞ்சாலையில் இப்போதும் ஒரு ஆம்புலன்ஸ் அலறிக்கொண்டு ஓடியது. ●

ரவிக்குமார் <adheedhan@gmail.com>

# நினைவுகள் மரிக்கும்போது

## சிவானந்தனின் 'When Memory Dies' நாவலை முன்வைத்து சில குறிப்புகள்

ராஜகோபால்

கலை ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு விதமான அர்த்தத்தைக் கொடுக்கிறது. சிலருக்கு அது பொழுதுபோக்கு, சிலருக்கு அது தொழில். சிலருக்கு அது வணிகம் சிலருக்கு அது அதிகரத்தை, புகழை அடைவதற்குக்கான மற்றொரு கருவி. சிலருக்கு அது சமூக செயல்பாடு; சிலருக்கு அது பெருவாரியான மக்களை சென்று அடைவதற்கான பிரச்சார சாதனம். சிலருக்கு அது தேடல். சிலருக்கு அது மிகைவிருப்பு (அப்ஷசன்); சிலருக்கே அது கலை.

சிவானந்தன் கலையும் சமூக செயல்பாட்டையும் இணைக்க விரும்பியவர். சிவானந்தன் என்ற சிந்தனையாளரின் பங்களிப்பை யாவரும் அறிந்திருப்பார்கள். அவருடைய வாழ்க்கை குறிப்பும் புகழ்பெற்ற சில கட்டுரைகளும் இணையத்தில் வாசிக்கக் கிடைக்கிறது. விரும்புவர்கள் அதைப் பின்தொடரலாம்.

சிவானந்தனனின் 'நினைவுகள் மரிக்கும்போது' என்ற இந்த நாவல் மூன்று தலைமுறைகளின் கதை. காலனியாதிக்கத்தாலும் இனவாதத்தாலு வன்முறையாலும் சூறையாடப்பட்ட எளிய மனிதர்களின் கதை. சகாதேவன், சகாதேவனின் மகன் ராஜன், ராஜனின் மகன் விஜய் என்ற மூன்று மனிதர்களின் பார்வையின் ஊடாக இலங்கையின் வரலாற்றையும் இலங்கையின் பிரச்சினையும் சித்தரிக்கிறது இந்த நாவல்.

சுதந்திரத்திற்கு முந்திய காலம். இலங்கையின் வடக்கில் விவசாயம் பொய்த்து போயிற்று. படித்தால் மட்டுமே பிழைக்க முடியும் என்ற சூழ்நிலையில் உறவினர்கள் உதவியோடு கொழுப்பிற்கு நகர்ந்து பிரிட்டீஷ் அரசாங்கத்தில் தபால்காரர் பணியில் சேரும் சகாதேவன், சோஷலிச சித்தாந்தத்தால் ஈர்க்கப்பட்ட நண்பன் திஸ்ஸாவை தொழிலாளர் போராட்டத்தில் பலி கொடுப்பதோடு, லட்சியங்களின் அழிவைக் காண்கிறான்.



சுதந்திரத்திற்குப் பிந்திய காலம். சகாதேவனின் மகனான பள்ளி ஆசிரியரான ராஜன் இடதுசாரி சித்தாந்தங்களின் மீது ஆர்வம்கொண்ட இலங்கை பெண்ணான லலியை காதலித்து திருமணம் செய்துகொள்கிறான். அதிகாரத்தை அடைவதற்காக பண்டாரநாயக்கா அரசு சிங்கள மொழியை அரசு மொழியாக அங்கீகரிக்க, அது பிரிவினையை கூர்மைப்படுத்துகிறது. பிரிவினை கலவரமாகவும் இன துவேஷமாக வெளிப்பட, அது தமிழ் மக்களைக் கூட்டம் கூட்டமாகக் கொன்று குவிக்கிறது. மனைவி பிள்ளையோடு இரவு வீடு திரும்பும் வழியில் சிங்கள காடையர்களிடம் மாட்டிக்கொள்கிறார் ராஜன். லலியை தமிழ் பெண் எனக் கருதி சிங்கள காடையர்கள் கற்பழித்துக் கொன்றுவிடுகிறார்கள். மனம் பேதலித்துபோன ராஜன் வாழ்க்கையில் இருந்து ஓட தொடங்குவதோடு நாவலின் இரண்டாம் பகுதி நிறைவுறுகிறது.

லலி மற்றும் ராஜனின் நண்பனான சேனாவின் காதலில் பிறந்த விஜய், மாணவ பருவத்திலேயே போராட்ட குழுக்களோடு தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறான். நெருக்கிய தோழியின் இறப்பு அவனை அலைகழிக்க ஆசிரியர் பணி வழியாகத் தன்னை மீட்க முயல்கிறான். இலங்கை பெண்ணான மனேலை திருமணம் செய்துகொள்கிறான். மனேலுக்கோ லௌகீகமே பிரதானம். இருவேறு உலகத்து வாழ்க்கை —உறவை கொஞ்சம் கொஞ்சமாக அழிக்க, மக்களை ஒன்றிணைக்கும் பணிகளில் ஈடுபடுத்திக்கொள்கிறான். இறுதியில் புலிகளால் அபத்த காரணத்திற்காக சுட்டுகொல்லப்பட்டு பரிதாபமாக இறக்கிறான்.

இறந்த காலம் பிரிட்டீஷாரால் சூறையாடப்பட்டது. எதிர்காலம் சிங்களவர்களால் களவாடப்பட்டது. நிகழ்காலமோ சொந்த சகோதரர்களால் படுகொலை செய்யப்பட்டது என்கிறார் சிவானந்தன். மூன்று பகுதிகளாக விரியும் நாவல் சிறிது சிறிதாக மனிதர்கள் எவ்வாறு சிதறுண்டு போகிறார்கள், அழிகிறார்கள் என்பதை விவரிக்கிறது. நாவலின் பலம் அது வரலாற்றுக் காரணிகளை கோர்வையாக அழகாக எளிய மொழியில் சித்திரிக்கிறது. பலவீனம் அடர்த்தியின்மை. நாவலுக்குரியபெரிய எழுச்சியோ விகாசத்தையோ அது அடையவில்லை.கதாபாத்திரங்களின் மன உலகத்திற்குள்ளோ நெருக்கடிகளுள்ளே அதிகம் பயணப்படவில்லை. நாவலில் இருந்து ஒரு பெரிய ஆகிருதியோ, நாவலுக்கே உரிய பார்வையோ உருக்கொள்ளவில்லை.. கலைஞனை சிந்தனையாளன் வெற்றிகொண்டதால் உருவான தோல்வி இது.

இயன் மெக்இவன் என்ற பிரிட்டிஸ் நாவலாசிரியர் மிலன் குந்தேராவிடம் ஒரு பேட்டியில் இவ்வாறு கேட்கிறார்: "இந்த உலகத்தை குறித்த விஷேச புரிதலை நாவல் என்கிற சாதனத்தால் மட்டுமே



அளிக்க முடியும், நாவலுக்கு மட்டும்தான் அது சாத்தியம் என்று ஏன் கருதுகிறீர்கள்?"

அதற்கு குந்தேரா இவ்வாறு பதில் அளிக்கிறார்: "வேறு எவ்வகையிலும் சொல்லமுடியாதவற்றை நாவல் வழியாகப் பகிர்ந்துகொள்ளமுடியும் என்றே நான் நம்புகிறேன். சமூக பிரச்சனைகளை விளக்க வேண்டியது நாவலின் பணி அல்ல. பிற அறிவுத்துறைகளால் அதை சிறப்பாக திறம்பட செய்யமுடியும். ஸ்டாலினஸத்தை கண்டனம் செய்ய நாவலை பயன்படுத்த வேண்டியதில்லை. துண்டு அறிக்கைகள் போதும். நாவலால் மட்டுமே மனித இருப்பின் புதிர்களை, சிடுக்குகளை, அதன் முழு பரிணாமத்தோடு வெளிப்படுத்த இயலும். நாவலுக்கு இணையாக இதை நிகழ்த்தக்கூடிய எந்த அறிவுபுலத்தையும் நான் அறியவில்லை. தத்துவத்தை கணக்கில் கொண்டே இதை சொல்கிறேன். நாவல் எல்லா அறிவு புலங்களையும் சந்தேக கண்கொண்டு அணுகுகிறது. மனித வாழ்க்கையை ஒரு அறிவு புலத்திற்குள் அடைத்து விட முடியாது என்று அது தீவிரமாக நம்புகிறது. அதனால்தான் உங்கள் கேள்விக்கு என்னால் எளிய பதிலை அளிக்க முடியவில்லை. இருப்பு குறித்தும் அதிகாரம் குறித்தும் உறவு குறித்தும் அதன் எண்ணற்ற சாத்தியப்பாடுகளை நாவல் அதன் பிரத்யேக தளத்தில் வைத்து ஆராய்கிறது. ஆதலால்தான் ஒவ்வொரு கேள்விக்கும் எண்ணற்ற சாத்தியப்பாடுகள் நாவலில் கிளைத்துக்கொண்டே இருக்கிறது. நாவல் பதில்களை அல்ல சாத்தியங்களையே முன்மொழிகிறது."




தமிழ் மற்றும் ஈழ இலக்கியத்தோடான சிவானந்தனின் உறவு எவ்வாறு என்று நான் அறியேன். கொண்டும் கொடுத்தும் இருந்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும் என்று மட்டும் சொல்ல தோன்றுகிறது.நாவலில் ஓர் இடத்தில், விஜயிடம் அவனது மாமா பரா இப்படி சொல்வார்: "நினைவுகள் அழியும்போது மனிதர்களும் அழிவார்கள்." அதற்கு விஜய், "அப்படியென்றால் நாம் போலியான நினைவுகளை உருவாக்கிக்கொள்வோம்" என்பான். "அது மோசம்! அது கொலைக்கு சமம்" என்பார் பரா.

போலி பெருமிதங்கள், போலி நினைவுகள்தான் அழிவு பாதையை சமைக்கிறது என்கிறார் சிவானந்தன். சிவானந்தனை குறித்து போலியான பெருமிதங்களை நாம் உருவாக்கிக்கொள்ள வேண்டாம். அதுவே நாம் சிவானந்தனுக்கு செய்யும் மரியாதை. ●

(லண்டனில் நடைபெற்ற சிவானந்தன் நினைவஞ்சலி கூட்டத்தில் வாசிக்கப்பட்ட கட்டுரை)

**ராஜகோபால்** <rajagopalrm@gmail.com>

# தீவிரவாதி

இளங்கோ

ஓவியம்: நடேஷ்

இலங்கை இராணுவத்தின் ஒபரேஷன்- லிபரேஷன் தாக்குதல் இடைநிறுத்தப்பட்டதற்கும் இந்திய அமைதிப்படையோடு இயக்கம் சண்டையைத் தொடங்குவதற்குமான இடையிலான மாதங்கள் சொற்பமே இருந்தபோதும் அந்தக் குறுகிய அமைதியை எங்கள் ஊர் ஏதோ ஒருவகையில் வரவேற்கத்தான் செய்தது.

ஊர் வைரவர் கோயில் விமர்சிகையாகக் கொண்டாடப்பட்டது. புளியமரத்தடியில் கிளித்தட்டும் பிள்ளையார் பேணியும் வயது வித்தியாசமின்றி குதூகலமாக விளையாடப்பட்டது. ஊர் சனசமூக நிலையத்தில் சிறுவர்களாகிய எங்களுக்கு பொது அறிவுப்போட்டிகள் வைத்து பரிசில்கள் வழங்கப்பட்டன. இப்படி இன்னும் பலவற்றில், ஊர் தன் உயிர்ப்பை மீளவும் கண்டுகொள்ளத் துடித்தது.

ஒருகாலத்தில் ஆடுகள் காவுகொடுக்கப்பட்டு வேள்விகள் நடந்த வைரவர் கோயிலில், இயக்கங்கள் பல்கிப்பெருகிய காலத்தில் மார்க்ஸைப் படித்த ஏதோ ஒரு இயக்கம் வேள்விகளுக்கு இனி தடை என்று உறுதியாய்ச் சொல்லியிருந்தது. எனது காலத்தில் எந்த அடைபெயரும் இல்லாதிருந்த வைரவர், சிறி ஞானவைரவராக திருமுழுக்குப் பெற்று சாந்த நிலையை அடைந்துமிருந்தார். அத்தோடு இந்த வைரவரைப் பற்றி அம்மா, தமது சிறுவயதில் நடந்ததாய்ச் சொன்ன கதையொன்றும் எனக்குக் கொஞ்சம் திகிலூட்டியது.



அன்றையகாலத்தில் எங்கள் வீடு இப்படி கல்வீடாக இருக்கவில்லை. மேலே பனையோலையும் கீழே சாணமும் மெழுகப்பட்ட குடிசை வீடாக இருந்திருக்கின்றது. மாலை ஆறேழு மணிக்கே ஊரடங்குச்சட்டம் வந்ததுபோல ஊர் அமைதியாகிவிடுமாம். ஏதாவது இயற்கையின் உபாதையைத் தவிர எவரும் குடிசையை விட்டு வெளியே போவதில்லை. அத்தோடு பக்கத்தில் இருந்த இந்த வைரவரும் சும்மா இருக்கவில்லை. வேள்விக்காக பலிகேட்கும் உக்கிர வைரவாக அல்லவா கொந்தளித்தபடி இருந்திருக்கின்றார்.

ஒருநாள் நள்ளிரவு அம்மாவின் அக்கா இயற்கை உபாதையிற்கு வெளியில் போய்விட்டுத் திரும்பி வரும்போது ஒருவர் பக்கத்துக் காணியில் நடந்துபோவதைக் கண்டிருக்கின்றார். வெள்ளைக் கோவணத்துணியோடு நிலத்தில் கால் பாவாமல் அவர் நடந்து போயிருக்கின்றார். அதுமட்டுமில்லாது அம்மாவின் அக்காவையும் அருகில் வரும்படியும் சைகையில் அழைத்துமிருக்கின்றார்.

பயத்தோடு பெரியம்மா கிட்டபோய் பார்க்கும்போது ஒரு நாயும் பக்கத்தில் நின்றிருக்கின்றது. எந்த அரிக்கன் லாம்பும் அவசியமில்லாமல், அவருடலிருந்து இயற்கையாகவே ஒளியும் பிரகாசித்துக் கொண்டிருந்திருக்கின்றது.

பெரியம்மாவிடம் "என்னை யாரென்று தெரிகிறதா?" என நாய் வாலாட்டியபடி நிற்கக் கேட்டிருக்கின்றார். "தெரியவில்லை. ஆனால், நான் இதுவரை சந்திக்காத ஒருவர் என மட்டும் நன்கு புரிகிறது" என நா குழறியபடி பெரியம்மா சொல்லியிருக்கின்றார்.

"இப்போதெல்லாம் யாரும் என்னை ஒழுங்காய் கவனிப்பதில்லை. படையலும் நேரத்துக்கு வைப்பதில்லை. என்னால் பட்டினி கிடக்க இனியும் முடியாது. அதுதான் இரவில் உணவு தேடி வெளிக்கிட்டுவிட்டேன்" என அவர் கூறியிருக்கின்றார்.

பெரியம்மாவுக்கு அவ்வளவு நடுக்கத்துடனும் இது நமது வைரவர்தான் என்பது நன்கு விளங்கிவிட்டது. ஆனால், வைரவரைக் கண்டதிலிருந்து அவருக்கு காய்ச்சல் வந்துவிட்டது. படுத்தபடியே "வைரவர்", "படையல்" என்று திருப்பத் திருப்ப ஒன்றையே உளறத் தொடங்கிவிட்டார். அம்மாவின் அய்யாவும் ஆச்சியும் அவரை இதிலிருந்து எப்படி விடுவிப்பதென தெரியாது குழப்பியிருக்கின்றனர். பிறகுதான் கோயில் பூசாரி, "இது வைரவரின் திருவிளையாட்டு. அவருக்கு ஒரு படையலிட்டால் எல்லாம் சரியாகிவிடும்" என்றிருக்கின்றார்.

பட்டினி கிடக்கும் வைரவரின் பசி, சர்க்கரைப் பொங்கலோடு மட்டும் அடங்காதென்று, அன்று வீட்டில் நல்ல விலைக்கு விற்பதற்கென வளர்த்துக் கொண்டிருந்த கிடாயை இந்த வைரவருக்கு



காணிக்கை செய்திருக்கின்றனர். அத்தோடு அவருக்குக் கொறிப்பதற்கென பெரிய வடைமாலையும் சூலத்திற்குப் போடப்பட்டிருக்கிறது. இப்படிப் படையலிட்டபின்தான் 'வைரவர் காய்ச்சல்' பெரியம்மாவை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகப் போயிருக்கிறது.

"கிடாய்களைத் தனது பட்டினிக்குக் காவு கேட்ட வைரவர், நாமெல்லாம் தூங்கும் இரவுகளில், சிவம் மாமாவின் கள்ளுக்கொட்டிலுக்குள் போய் கள்ளும் குடிப்பாரோ" என, நான் அந்தக் கதையின் சுவாரசியத்தில் வாய் தவறி அம்மாவிடம் கேட்டுவிட்டேன். "உன்ரை அப்பாவைப் போல மோட்டுக்கதை கதைக்காமல் போய்ப் படு" என்று அம்மா அன்று அதட்டி அனுப்பியுமிருந்தார்.

எங்கள் ஊரில் போரின் நிமித்தம் அநியாயச் சாவுகள் பிறகு நடக்கத்தொடங்கியபோது, வைரவரின் வேள்வியை நிற்பாட்டிய அபசகுனந்தான் இவை நடப்பதற்குக் காரணம் என்றும் ஊர்ச்சனம் சொல்லிக்கொண்டும் திரிந்தது. அந்தக் காலத்தில்தான், மார்க்ஸைப் படித்து வேள்வியைத் தடை செய்த இயக்கத்தை, சோஸலிசத் தமிழீழம் அமைப்போமென்ற இன்னொரு இயக்கம் இனி களத்தில் இயங்கக்கூடாதென, அவர்களைத் தடையும் செய்தது.

எங்கள் வைரவர் கோயிலிற்கு செல்லப்பா ஆச்சி தன் செலவில் ஒரு மணிக்கூட்டுக் கோபுரம் கட்டிக் கொடுத்தார். மணிக்கூட்டுக் கோபுரம் எழ முன்னரே விசாலமான பரப்பில் மடப்பள்ளி இருந்தது. மடப்பள்ளிக்கு அருகில் சிவம் மாமாவின் கள்ளுக்கொட்டில் இருந்தது. மடப்பள்ளியில் பொங்கல் செய்து வைரவருக்குப் படைத்துவிட்டு, அய்யர் எங்களுக்கும் கொஞ்சம் கிள்ளித்தரும்போது சிலவேளை அவ்வளவு ருசியாக இருக்கும். எல்லாவற்றையும் வித்தியாசமாகப் பார்க்கும் எனது நண்பன் கிரி ஒருநாள் சொன்னான், "பொங்கல் ருசியாக இருக்கிற நாளில் அய்யர் தேங்காய்ப் பாலுக்குப் பதிலாக, சிவம் மாமாவின் கள்ளை எடுத்துத்தான் பாவிக்கின்றவர்."

எனக்கும் அது உண்மைதானோ என்பதில் கொஞ்சம் சந்தேகம் இருந்தது. சிவம் மாமாவின் கள்ளுக்கொட்டிலுக்குள் ஒருபோதும் போகவிடாத அம்மா, ஒரேயொரு விசயத்துக்காக மட்டும் என்னை உள்ளே நுழைய அனுமதிப்பார். அது எப்போதென்றால், வீட்டில் அப்பம் சுடும் போதாகும். அதற்கு முதல்நாள் மா எல்லாம் குழைத்து வைத்துவிட்டு நொதிப்பதற்காய் சிவம் மாமாவிடம் கள்ளுக் கொஞ்சம் வாங்கிவர அனுப்புவார். அம்மாவின் அப்பம் இவ்வளவு உருசியாக இருப்பதற்கு சிவம் மாமாவின் கள்ளுத்தான் காரணம் என்பதை நேரடியாக அனுபவித்தவன் என்றபடியால், எனது நண்பன் பொங்கல் சுவையாக இருக்கும் நாட்களில் கள்ளுச் சேர்த்திருக்கலாம் எனச் சொல்வதிலும் ஒரு நியாயம் இருக்கத்தான் செய்தது.

அந்த வருடம் எங்கள் ஊர் வைரவர் கோயில் திருவிழா மேளச்சமா, இன்னிசைக்குழு என்று அமர்களப்படுத்தியது. ஊரிலிருப்பவர்களும் வருடம் முந்நூற்று அறுபத்து நாட்களும் தமது பக்கத்து வீட்டுக்காரர்களோடு செய்யும் பிணக்குகள், கோள்மூட்டல்கள் என்பவற்றை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, இவை எதற்கும் தொடர்பு இல்லாததுபோல அவ்வளவு சாந்தமான முகங்களுடன் கோயிலடியில் கூடியிருந்தார்கள். ஒருபக்கத்தில் மேளச்சமா நடக்க, மறுபுறத்தில் வந்திருப்பவர்களுக்கு அன்னதானம் கொடுப்பதற்கென பெரிய பெரிய அண்டாக்களில் சமையல் நடந்து கொண்டிருந்தது. வைரவர் வீதியுலா வரும்போது தவில்காரர்கள், 'ஆயிரம் தாமரை மொட்டுக்கள்', 'ஆனந்தத் தேன்மழை' போன்ற பாடல்களை எல்லாம் வெகு சுதியாய் அடித்தார்கள்.

எங்களுக்கு ஒரே உற்சாகம். கூச்சலும் கும்மாளமாக ஆடவும் செய்தோம். அந்த திருவிழாவின்போது கோயில் அய்யா கூட நல்ல மனோநிலையில் இருந்தார். மற்ற நேரத்தில் வைரவர் புளியமரத்தடியில் விளையாடும்போது கோயில் பூசையைக் குழப்புகின்றவங்கள் என்று எங்களைக் கோபத்தோடு கலைத்துவிடுகின்றவர், "இந்தமுறை திருவிழாவுக்கு நீதான் சங்கு ஊதுகின்றாய்" என ஒரு கிழமைக்கு முன்னரே என்னிடம் சொல்லியும்விட்டிருந்தார்.

சங்கில் நான் என்ன ஊதக் கிடக்கிறது. அனேகமான வேளைகளில் ஊ ஊ என்று ஊதினாலும் வெறும் காற்றுத்தான் வரும். சில பெடியங்கள் நன்றாக ஊதுவாங்கள். ஆனால், ஒழுங்காய் ஊதத் தெரியுமோ இல்லையோ திருவிழாவின்போது அய்யா எனக்கு அந்த மரியாதையைத் தந்தது மகிழ்ச்சியாக இருந்தது. உங்கள் ஒருவருக்கும் கிடைக்காத மதிப்பு எனக்குக் கிடைத்திருக்கிறதென, இதை வைத்தே என் வயசுப் பெடியங்களிடையே என் மதிப்பை உயர்த்திவிடலாம் என்றொரு இரகசியத் திட்டமும் என்னிடம் இருந்தது. சங்கு ஊத வரச்சொன்ன அய்யாவிடம் நான் அன்றைக்குக் குளித்துவிட்டு வரவேண்டுமா அல்லது இல்லையா என்று கேட்க மறந்ததும் பிறகு ஞாபகத்துக்கு வந்து தொலைத்தது.

மாலையில் வைரவர் கோயில் முன்றலில் சடைத்துக்கிடந்த பாதிரிப்பூ மரப்பக்கமாய் ஒரு மேடை போடப்பட்டு, ராஜன் கோஷ்டி பாடுவதற்காய் அழைக்கப்பட்டிருந்தனர். ராஜனோ அல்லது அவரது நண்பரோ ஸ்டைலாக கிற்றாரைப் பிடித்தபடி இருந்ததைப் பார்த்துவிட்டு, வளர்ந்தால் ஒரு கிற்றாரிஸ்டாக வரவேண்டுமென வைரவரை வேண்டிக் கொண்டேன்.

மாலைச் சூரியன் மங்க, வர்ணமயமான ரியூப் லைட்டுக்குள் ஒளிர, இசை எங்கள் ஊரை ஒரு நதியைப் போல சுற்றிச் சுற்றிப் போகத் தொடங்கியது. இதற்குள்ளும் ஒரு கூட்டம் என்ன பாட்டு ராஜன் கோஷ்டி பாடுகின்றதென்று அக்கறையில்லாது, பாவாடையும் தாவணியும் கட்டி, கையில் அணிந்த வளையல்களைப் போல சிணுங்கிக் கொண்டிருந்த பெண்களின் பின்னால் அலைந்தபடி இருந்தது.

வீடுகளில் இருக்கும்போது எண்ணெய் வழியும் முகத்தோடும் பாவாடை சட்டைகள் அணிந்தும் ஏனோ தானோவென்று இருக்கும் அக்காமார்கள், இவர்கள் எல்லாம் எங்கள் ஊரில்தான் இவ்வளவுநாளாய் இருந்தார்களோ என்று எண்ணுமளவிற்கு அழகு பொலிந்து மிளிர்ந்து கொண்டிருந்தார்கள். கச்சான் விற்கும் ஆச்சிமார்களுக்கும் வானில் வந்து ஐஸ்கிரீம் விற்கும் ரியோ, லிங்கன்காரர்களுக்கும் நல்ல விற்பனை அன்று நடந்து கொண்டிருந்தது.

தாங்கள் காதலிக்கும் அல்லது காதலிக்க விரும்பும் பெண்களுக்காய், இந்த அண்ணாமார்கள் தமது காசைக் கச்சானுக்கும் ஐஸ்கிறிம்களுக்கும் கவலையின்றி செலவழித்துக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் இசை நிகழ்ச்சியிடையே நன்கு அவதானித்த நானும் என் நண்பன் கிரியும், யாராவது அக்காவிற்கு எவராவது அண்ணா எதையாவது வாங்கிக்கொடுக்க சமிக்ஞை கொடுத்து அவர்களைக் கூட்டிச்செல்லும்போது, நாங்களும் ஏதோ அந்த அக்காவிற்கு நன்கு தெரிந்தவர்கள் போல கூடவே சேர்ந்துபோவோம்.

வேறு வழியில்லாமல் அந்த அக்காவிற்கு வாங்கும் கச்சானையோ, ஐஸ்கிறிமையோ எங்களுக்கு அவர்கள் வாங்கித்தர வேண்டியிருக்கும். நாங்கள் இந்த விளையாட்டை மிகுந்த உற்சாகத்தோடு சில தடவைகள் செய்தோம்.

இடையில் ஒருமுறை யாரை இப்படி ஏமாற்றலாம் என உளவு பார்த்துக் கொண்டிருந்தபோது, எங்கள் பெரியம்மாவின் மகன் சுரேஷ் அண்ணா, ஒரு அக்காவுக்கு சமிக்ஞை கொடுத்துக் கூட்டிக்கொண்டு போனார். அந்த அக்காவை யாரென்று என்னால் மட்டுக்கட்ட முடியவில்லை. எங்கள் ஊரைச் சேர்ந்தவர் இல்லை என்பது மட்டும் தெரிந்தது. இந்தத் திருவிழாவுக்கு எங்கள் ஊரென்று இல்லாது மற்ற இடங்களிலிருந்தும் பலர் வருவார்கள். இந்த அக்கா, யாரேனும் எங்கள் ஊர் அக்காக்களோடு பாடசாலையில் படிக்கும் ஒருவராகவோ அல்லது சுரேஷ் அண்ணாவிற்காகவே இந்த திருவிழாவிற்கு அவர் வந்துமிருக்கலாம்.

எனக்கு அது குறித்து பெரிதாக அக்கறை இருக்கவில்லை. சுரேஷ் அண்ணாவின் இந்தக் கள்ளத்தைப் பிடித்துவிட்டால், வேறு வழியின்றி அவர் எனக்கும் ஐஸ்கிறிம் வாங்கித் தரத்தான் வேண்டும் என்பது மட்டும் உறுதியாய்த் தெரிந்தது.

நான் அவர்கள் இருவரையும் பின் தொடர்ந்து போகும்போது ஐஸ்கிறிம் வேன்கள் இருக்கும் பக்கமாய் செல்லாது இருவரும் மற்றத் திசையில் போகத் தொடங்கியதை அவதானித்தேன். இருவரும் மடப்பள்ளிக்கும் சிவம் மாமாவின் கள்ளுக்கொட்டிலுக்கும் இடையில் இருக்கும் ஒடைக்கிடையில் புகுந்து போனார்கள். ஏன் அவ்வளவு இருட்டைத் தேடிப் போகிறார்கள் என்பதைக் கண்டுபிடிக்க எனக்குள்ளும் சுவாரசியம் கூடிவிட்டது.

நான் ஒடைக்குள் பூனையைப் போல



நுழையும்போது அவர்கள் இருவரும் அணைத்துக் கொண்டிருப்பது சாதுவான வெளிச்சத்தில் தெரிந்தது. 'ஓ இதுவா விஷயம்' என்று நான் வந்தமாதிரியே திருப்புகையில் அங்கே கிடந்த பனைமட்டையை மிதித்துவிட்டேன். சுரேஷ் அண்ணாவுக்கு அந்தச் சத்தம் கேட்டுவிட்டது. சுதாகரித்து, "யாரடா" என ஓடிவந்து, நான் சனத்துக்குள் ஓடி மறைவதற்குள் அவர் என்னைப் பிடித்துவிட்டார்.

"நீயா ?" என்று அவருக்கு ஆச்சர்யம் ஒருபுறமும் மறுபுறமாக நான் பெரியம்மாவிடம் இந்த விவகாரத்தைச் சொல்லிவிடுவேனோ என்று அச்சமும் வந்துவிட்டது.

"நீ இப்போது பார்த்ததை எல்லாம் அம்மாவிடமோ பெரியம்மாவிடமோ சொல்லக்கூடாது" என சத்தியம் செய்யக் கேட்டார். "நான் சத்தியம் செய்கிறேன், ஆனால், எனக்கு இப்போது ஐஸ்கிறிம் வாங்கித் தரவேண்டும்" என்று எனக்கு வேண்டியதை கேட்டுப் பெற்றுக்கொண்டேன்.

இதன்பிறகு, நான் பெரியம்மா வீட்டுக்குள் போய் நின்றுகொண்டு, "பெரியம்மா, உங்களுக்கு ஒரு கதை தெரியுமா?" என்று தொடங்கிவிட்டு சுரேஷ் அண்ணாவின் முகத்தைப் பார்ப்பேன். அவர், 'சொல்லாதே சொல்லாதே' என்று சமிக்ஞையால் கெஞ்சுவார். அப்படியெனில் அடுத்தமுறை நீங்கள் வெளியில் போய்விட்டு வரும்போது இதையிதை வாங்கிக்கொண்டு வந்து எனக்குத் தரவேண்டுமென ஒரு பட்டியல் கொடுப்பேன்.

அன்று ஐஸ்கிறிமில் தொடங்கி பிறகு கச்சான் அல்வா, தோடம்பழ இனிப்பு, மில்க் சொக்கிலேட் என்று அந்தப் பட்டியல் பிறகு நீண்டுகொண்டே போனது.

சுரேஷ் அண்ணா விரும்புகிற அக்காவுக்கு, தேவகி என்ற பெயரென பின்னர் அறிந்துகொண்டேன். இந்திய அமைதிப்படை, மக்களுக்கு அகிம்சையைப் போதிப்பதிலிருந்து மக்களைக் கொல்லும் படையாக- அதாவது Indian Peace Keeping Forceல் இருந்து Indian People Killing Force ஆக- மாறியபின்னும் அவர்களின் இந்தக் காதல் தொடர்ந்தது.

அமைதி குலைந்த நாட்களில் இளைஞர்கள் வெளியில் திரிவதே பெரும் சிக்கலாக இருந்தது. வீட்டை விட்டு வெளிக்கிடும் பெடியளை ஒருபக்கம் இந்தியன் ஆமி துரத்தித் துரத்திச் சுட்டது. இன்னொரு பக்கம் அவர்களோடு இயங்கிக் கொண்டிருந்த 'Three Stars' என்ற பெயரில் இயங்கிய குழு, இளைஞர்களைப் பலவந்தமாக இழுத்துக்கொண்டு தங்களோடு இணைத்தது. இந்த இரண்டு தரப்பும் போதாது என்று, சோஷலிச தமிழீழம் பெற்றுத் தருவோமென்ற தியாகு அம்மானின் இயக்கமும் துரோகிகள் என்று நாமம் சூட்டி அளவுகணக்கில்லாது பலரைப் போட்டுத் தள்ளிக் கொண்டிருந்தது.

இவ்வளவு அவதிகள் இருந்தாலும் இயற்கையின் ஆற்றலுகளுக்கெல்லாம் எப்படி அணை கட்டுவது. இதற்குள்ளும் ஊரிலிருப்பவர்கள் காதலித்துக் கொண்டிருந்தார்கள். பிள்ளைகளைப் பெற்றுக் கொண்டிருந்தார்கள். ஓரடி வேலியை முன்னே போட்டதற்காய் காணியை முன்வைத்து பக்கத்து வீட்டுக்காரர்களுடன் சண்டையும் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

சுரேஷ் அண்ணா, 'திரி ஸ்டார்'காரரைச் சேர்ந்த பிள்ளைபிடிக்காரர்கள், தன்னையும் பிடித்துக்கொண்டு போய் அவர்களோடு பலவந்தமாய்ச் சேர்த்துவிடுவார்களோ என்ற பயத்தில், தேவகி அக்காவைச் சந்திக்கும்போதெல்லாம் என்னையும் தன் சைக்கிள் பாரில் ஏற்றிக்கொண்டு போகத் தொடங்கினார்.

கூட்டிக்கொண்டு போகும்போது, என்னுடைய ஊர் எதுவென்று யாரேனும் கேட்டால், எங்கள் சொந்த ஊரின் பெயரைச் சொல்லாது ஏழெட்டுக் கிலோமீற்றர்கள் தூர இருக்கும் இன்னொரு ஊரொன்றின் பெயரைச் சொல்லச் சொல்வார்.

திரி ஸ்டார்காரர் தெருவில் மறித்தால், இந்தச் சின்னப்பையனை இடைநடுவில் விட்டுவிட்டு நான் உங்கள் இயக்கத்துக்கு வரமுடியாது என்று அவர் கெஞ்சினால், திரி ஸ்டார்காரர் கேட்பார்கள் என சுரேஷ் அண்ணாவுக்கு ஒரு அசட்டு நம்பிக்கை இருந்தது.

இப்பிடிப் பிடிக்கும்போது, எங்கள் ஊரின் பெயரைச் சொன்னால், பக்கத்தில்தானே இருக்கிறது, அவனாக நடந்துபோவான் என்றோ அல்லது தெருவில் போகும் எங்கள் ஊர்க்காரர் யாரிடமாவது என்னைக் கொடுத்து அனுப்பிவிடுவார்களோ என்பதால்தான் எங்கோ தொலைவில் இருக்கும் ஒரு ஊரைச் சொல்லும்படி சுரேஷ் அண்ணா எனக்குக் கட்டளையிட்டிருந்தார். சின்ன வயதிலேயே எப்படியெல்லாம் சுழித்து வளைத்து ஓடலாம் என்பதை இப்படி எங்களுக்குப் போர் கற்றுத் தரத் தொடங்கியிருந்தது.

சுரேஷ் அண்ணாவின் இந்த 'தியரி' சிலமுறை உண்மையிலே வேலை செய்திருக்கிறது. அப்படித் தப்பி பிழைத்து வந்தபோதெல்லாம் அண்ணா என்னை விசேசமாகக் கவனித்துக்கொள்வார். ஏதாவது உணவுக்கடைக்குக் கூட்டிக்கொண்டு போய் ரோல்ஸ்சையோ, போண்டாவையோ வாங்கித் தந்து நன்கு உபசரிப்பார்.

நாட்டில் நிலைமைகள் விபரீதமாகப் போய்க்கொண்டிருக்க, பெரியம்மா, சுரேஷ் அண்ணாவை கொழும்புக்கு எப்பாடுபட்டேனும் அனுப்ப வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்தார். அப்போது கொழும்புக்குப் போவதற்கான ஒரே வழி, பலாலி விமான நிலையத்தினூடு செல்வதுதான். அப்படி அனுப்பும்போது இந்தியன் ஆமியின் முகாங்கள், திரி ஸ்டார்களின் பிள்ளைபிடிப்புக்கள், தியாகு அம்மானின் இயக்கம் அதிகாலையில் வைத்திருக்கக்கூடிய கண்ணிவெடிகள் போன்றவற்றில் இருந்து முதலில் தப்பியாக வேண்டும். கரணம் தப்பினால் மரணம் மாதிரிதான் இந்த வழியனுப்பல்கள் அந்தக் காலங்களில் நிகழ்ந்து கொண்டிருந்தன.

சுரேஷ் அண்ணாவின் கொழும்புப் பயணம் ஓரளவு உறுதியாகிவிட்டிருந்தது. அண்ணாவும் போவதற்கு முன் தேவகி அக்காவை அடிக்கடி பார்க்க விரும்பிக் கொண்டிருந்தார். பொருள் வயிற்றுப் பிரிவு போல இது போர் துரத்தும் பிரிவு. அப்போது எங்கள் பக்கத்துக் கிராமத்துத் துர்க்கையம்மனின் திருவிழா நடந்து கொண்டிருந்தது. ஒருபக்கம் நாளாந்தம் உயிரோடு இருப்பதே அதிசயமாக இருக்கும்போது, மறுபக்கத்தில் திருவிழாக்களும் அதன்போக்கில் நடந்து கொண்டிருந்தன

அம்மன்கோயில் தேர்த் திருவிழாவின்போது சந்திப்பதென்று செய்தி இருவருக்குமிடையில் பரிமாறப்பட்டது. வழமைபோல நானும் சுரேஷ் அண்ணாவின் சைக்கிள் பாரில் ஏறிக் குந்திக்கொண்டேன். அன்று தேர்த் திருவிழா என்பதால் சனம், கால் வைக்கவே இடமில்லாதபடி தேரோடு அலையலையாய் அள்ளுப்பட்டுக் கொண்டிருந்தது.

இதற்கு முதல் வருடந்தான் இலங்கை இராணுவம் குண்டை வீசியதால் தேர் சேதமாகியிருந்தது. சனங்களைப் போல கடவுள்களும் வாழ்தலின் மீதான உயிர்ப்பை அவ்வளவு எளிதில் கைவிட மறுதலிப்பவர்கள் என்பதால், எரிந்துபோன தேர் விரைவில் திருத்தம் செய்யப்பட்டு தேர்த் திருவிழாவுக்கு தயாராகிவிட்டிருந்தது.

நான் தேவகி அக்காவையும் சுரேஷ் அண்ணாவையும் கதைக்கவிட்டு சற்றுத்தள்ளி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். என்னுடைய அசட்டையீனமோ அல்லது அவர்களின் காதலின் ஆர்வக்கோளாறோ, நான் அவர்கள் இருவரையும் ஒருகட்டத்தில் தொலைத்து விட்டிருந்தேன்.

அங்குமிங்குமாய் தேடு தேடென்று அவர்களைத் தேடிப் பார்த்துக் களைத்துவிட்டேன். சுரேஷ் அண்ணா இல்லாது எப்படி வீடு தனியே போய்ச்சேர்வது என்ற பயத்தில் எனக்கு அழுகையும் வந்துவிட்டது.

அவ்வளவு கூட்டத்தில் நான் எப்படி இவர்களைத் தேடுவது? இறுதியில் மலங்க மலங்க நின்ற என்னை கோயில் அறங்காவலர்கள் கண்டு, குழந்தைகள் தொலைந்தால் கண்டுபிடிக்கவென இருக்கின்ற இடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார்கள்.

அங்கே, ஒலிபெருக்கியில் தொலைந்துபோன பிள்ளையின் பெயரைச் சொல்லிப் பெற்றோரைத் தேடுவார்கள். நான் அவர்களுக்கு சுரேஷ் அண்ணாவோடு வந்தவன் என்று கூறினேன். அங்கே நின்ற ஒருவர், "தம்பி சுரேஷ் என்று நிறையப் பேர்கள் இருப்பார்கள். வேறேனும் விசேட அடையாளம் இருந்தால் சொல்லும். அதையும் சேர்த்துச் சொன்னால் எளிதாகக் கண்டுபிடிக்கலாம்" என்றார்.

அப்படி ஏதேனும் வேறு விசேட அடையாளம் சுரேஷ் அண்ணாவுக்கு இருக்கிறதா என யோசித்துப் பார்த்தேன். அந்த ஐயாவிடம், "வேண்டுமென்றால் 'தேவகி அக்காவோடு எப்போதும் பேசிக்கொண்டிருக்கும் சுரேஷ் அண்ணா' என்று அறிவித்துப் பாருங்கள்" என்று சொல்லிவிட்டேன்.

அந்த ஐயாவும், "சுரேஷோடும் தேவகியோடும் வந்த இந்த ஊரைச் சேர்ந்த சிறுவன், தொலைந்து போனவர்களைக் கண்டுபிடிக்கும் இடத்தில் இருந்து அவர்களைத் தேடிக் கொண்டிருக்கின்றார்" என அறிவித்துவிட்டார்.

என்னைப் பிறகு சுரேஷ் அண்ணாவும் தேவகி அக்காவும் கண்டுபிடித்துவிட்டனர். ஆனால், நாங்கள் வீடு போய்ச் சேர முன்னரே, சுரேஷூம் தேவகியும் காதலிக்கின்றார்கள் என்ற செய்தி ஊருக்குள் போய்ச் சேர்ந்திருந்தது.

அன்று துர்க்கையம்மன் திருவிழாவுக்கு வந்த யாரோ ஊர்க்காரர் இந்த அறிவிப்பைக் கேட்டிருக்கின்றார். அம்மன், தாங்கள் கேட்ட வரத்தைத் தருகின்றாரோ இல்லையோ, இப்படி ஒரு சோடி காதலித்துக் கொண்டிருக்கிறது என்பதை முதன்முதலாகக் கண்டுபிடிப்பதில்தானே ஒவ்வொரு ஊருக்கும் அதிக கிறக்கம் இருக்கிறது.

"கொழும்பு போவதற்கு முன்னர் கோயிலுக்குப்போய் கும்பிட்டு வரத்தானே உன்னை அனுப்பினான். நீ என்னவெல்லாம் அங்கே செய்துகொண்டிருந்தாய்" என்று பெரியம்மா, சுரேஷ் அண்ணாவை நோக்கிப் பிரசங்கத்தைத் தொடங்கவும், நான் இந்தக் கதை எதையும் அறியாத ஒரு அப்பாவியைப் போல, மெதுவாக நழுவி எங்கள் வீட்டுக்குள் புகுந்துகொண்டேன்.



திரி ஸ்டார்காரர்களிடமிருந்து தப்பும் சுரேஷ் அண்ணாவின் தியரி ஒருபோது பிழைத்தபோது அது பெரும் சிக்கலாகிப் போயிருந்தது. அன்று தேவகியக்காவை அவர்களின் ஊர் ஒழுங்கைக்குள் வைத்துச் சந்திப்பதற்காக நானும் சுரேஷ் அண்ணாவும் சைக்கிளில் போய்க்கொண்டிருந்தோம். அநேகமான வேளைகளில் தேவையின்றி முக்கியமான தெருக்களுக்கோ- அதிலும் ஆமிக்காரனின் முகாங்கள் இருக்கும் சந்திகளுக்கோ- நாங்கள் போவதில்லை. இயன்றவரை ஒழுங்கைகளையும் குச்சொழுங்கைகளையும் பாவித்தே தேவகி அக்காவின் ஊர்ப் பக்கமாய் நாங்கள் போவோம்.

அன்று தியாகு அம்மானின் இயக்கம் திரி ஸ்டார்காரர்களில் இரண்டு பேரைப் போட்டுத் தள்ளியிருக்கின்றது. திரி ஸ்டார்காரர்கள் தியாகு அம்மானின் இயக்கத்தில், இரண்டு பேரையாவது போடாமல் வெறியை இறக்குவதில்லையென்று பிக்- அப்புக்களில் அங்கும் இங்குமாக ஆவேசமாக அலைந்து திரிந்து கொண்டிருந்தார்கள். இதற்கிடையில் கைகளில் அகப்பட்ட அப்பாவிப் பெடியன்களையும் அடித்து உதைத்து, தங்களின் இயக்கத்தில் சேர்ப்பதற்காய் ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

இப்போதெல்லாம் ஊரிலிருக்கும் இளைஞர்கள் அதிபுத்திசாலியாகி முக்கியமான தெருக்களையே பாவிப்பதில்லை என்பதை ஊகித்தறிந்து, நாங்கள் வழமையாகப் போகும் ஒழுங்கையொன்றின் முடக்கில் திரி ஸ்டார்காரர் தமது வாகனங்களோடு பதுங்கி நின்றனர். “அண்ணே, அவங்கள் அந்த முடக்கில் நிற்கின்றாங்கள்” என்று நான் சொல்லி, சுரேஷ் அண்ணா சுதாகரித்து சைக்கிளைத் திருப்பமுன்னர், அவர்கள் எங்களைக் கண்டுவிட்டனர்.

இனித் திருப்பிச் சைக்கிளை வெட்டி எடுத்து ஓடமுடியாது. ஓடினால் முதுகில் துவக்கால் சல்லடை போட்டுவிட்டு, “தப்பியோடிய தியாகு அம்மானின் இயக்க ஆட்களில் இருவர் பலி” என்று செய்தியைப் பரவ விட்டுவிடுவார்கள். அப்படி நடந்திருந்தால் என்னைப் பற்றியும் தியாகு அம்மானின் இயக்கத்துக் ‘குழந்தைத் தீவிரவாதி’ என்று கொழும்பிலிருந்து வரும் ஏதேனும் பத்திரிகை சிறுபெட்டிச் செய்தியாக இந்தச் சம்பவத்தை வெளியிட்டிருக்கும். .

சுரேஷ் அண்ணா, ‘நடப்பது இனி நடக்கட்டும்’ என்கின்ற விரக்தியான மனோநிலையில் அவர்களை நோக்கிச் சைக்கிளை நகர்த்தினார். வழமைபோல அவர் தன்னுடைய தியறியைப் பாவித்தார். என்னிடமும் திரி ஸ்டார்காரர் ஊரைக் கேட்டபோது எனக்கு புவியியல் வகுப்பு வைத்து சுரேஷ் அண்ணா சொல்லித் தந்ததையே பிசகின்றி ஒப்புவித்தேன்.

எல்லாத் தியறிகளுக்கும் விதிவிலக்குகள் உண்டு என்பதுபோல, அவை வேலை செய்வதற்கும் சில புறக்காரணிகளும் துணையிருக்க வேண்டும். இன்று அவ்வாறு நமது தியறி எளிதில் வெற்றி பெறாது என்பதை உறுமிக்கொண்டும் கெட்டவார்த்தைகளை அடிக்கடி பாவித்துக்கொண்டும் சிவந்த கண்ணோடும் நின்ற திரி ஸ்ரார்கார் ஒருவர் உறுதிப்படுத்தினார்.

சுரேஷ் அண்ணாவைப் பார்த்து, “உந்த விசர்க் காரணத்தைச் சொல்லாது, நீ போய் அந்த பிக்-அப்பில் ஏறடா” என்றார்.

தியறி தோற்றுக் கொண்டிருப்பது உறுதியாய் எனக்கும் தெரிந்தது. சுரேஷ் அண்ணாவை இழந்துவிடுவேன் போலத் தோன்ற இன்னும் பயமாய் இருந்தது.

என்னிலிருந்து எப்படி ஓர் ஓர்மம் வந்ததெனத் தெரியாது. “சுரேஷ் அண்ணா இல்லாமல் நான் வீட்டை போகமாட்டேன்” என்று உரத்தக் குரலில் கத்தி அழத் தொடங்கிவிட்டேன். நின்ற திரி ஸ்டார்காரர்கள் எல்லோரும் ஒருகணம் சத்தம் வந்த என் திசையை நோக்கித் திரும்பிப் பார்த்தனர். சிவப்புக் கண் திரி ஸ்டார்காரர் எனக்கு முதுகில் அடித்து, “பொத்தடா வாயை” என்றார்.

நான் இன்னும் சத்தமாக அடி வயிற்றிலிருந்து கத்தி அழத் தொடங்கியதோடு, எனக்கு அப்போது கெட்டவார்த்தைகள் எனச் சொல்லித்தரப்பட்ட “குஞ்சாமணி”, “சனியன்”, “மூதேவி”, “கொட்டை” போன்ற சொற்களைச் சொல்லித் திருப்பத் திரும்பக் கத்தினேன். அத்தோடு நிலத்தில் விழுந்து புழுதியில் புரண்டு புரண்டு அழவும் தொடங்கிவிட்டேன். “அண்ணா இல்லாது எனது ஊருக்குப் போக வழி தெரியாது” என்ற தியறியை அவ்வளவு அழுகைக்கிடையிலும் மறக்காமல் தொடர்ந்து ஒப்புவித்துக் கொண்டிருந்தேன்.

என்னதான் கொடுமைக்காரர்கள் என்ற ஒரு முகமூடியை அணிந்திருந்தாலும் திரி ஸ்டார்காரர்களும் எங்களைப் போன்ற சாதாரண மக்களாய் ஒருகாலத்தில் இருந்தவர்கள்தானே. மக்களுக்காய் ஏதோ செய்யவேண்டும் எனத்தானே அவர்களும் புறப்பட்டவர்களாய் இருப்பார்கள். என் கதறலோ அல்லது ஏதோ ஒன்று அவர்களின் மனத்தின் ஆழத்தைத் தொட்டிருக்க வேண்டும்.

அங்கிருந்த தாடிவைத்த ஒருவர் எங்களை நெருங்கி வந்து சிவப்புக்கண்காரரிடம், “இவங்கள் இரண்டு பேரையும் அனுப்பிவிடு” என்று சொன்னார்.

சுரேஷ் அண்ணாவுக்குப் போன உயிர் திரும்பி வந்தமாதிரி இருந்தது. நாங்கள் எங்கள் ஊரை நோக்கி சைக்கிளை உழக்கத் தொடங்கினோம்.

தன்னைக் காப்பாற்றியதற்காய் என்னை நன்றியுடன் பார்த்த சுரேஷ் அண்ணா, "இப்படி நீ மண்ணில் விழுந்தெல்லாம் புரண்டு, கத்தி ஆர்ப்பாட்டம் செய்வாய் என்று நான் ஒருபோதும் எதிர்பார்க்கவேயில்லை" என்றார்.

எனக்குக்கூட எனக்குள் அப்படி ஒரு ஊற்று எங்கே இருந்ததென்பதை நினைக்க வியப்பாகத்தான் இருந்தது.

"உங்களை அவங்கள் பிடித்துக்கொண்டு போய்விடுவார்கள் என்பதைவிட, தேவகி அக்கா பிறகு உங்களை இழந்து கதறிக்கதறி அழக்கூடாது என்பதற்காகத்தான் அப்பிடிச் செய்தேன்" என்றேன்.

அவருக்கு நான் இப்படிச் சொன்னது ஏதோ செய்திருக்க வேண்டும். சைக்கிள் ஓடிக்கொண்டிருந்த ஒரு கையை எடுத்து என் முதுகில் வாஞ்சையாகத் தடவிவிட்டார். அதற்குப் பிறகு நாங்கள் வீடு போய்ச் சேரும்வரை சுரேஷ் அண்ணா எதுவுமே பேசவில்லை.

அன்று நாங்கள் தேவகி அக்காவைச் சந்திக்காமலே திரும்பியிருந்தாலும் பிறகு தேவகி அக்காவுக்கு நடந்ததையெல்லாம் விலாவாரியாக சுரேஷ் அண்ணா சொல்லியிருக்கின்றார்.

தேவகி அக்கா அடுத்தமுறை என்னைச் சந்தித்தபோது ஓடிவந்து என்னைக் குனிந்து அணைத்துக்கொண்டார். "நீ நல்லாய் வருவாயடா" என்று சொன்னபோது அவரது கண்கள் அப்படிக் கலங்கியிருந்தன.

சுரேஷ் அண்ணா கொழும்புக்குப் போவதற்கான ஆயத்தங்களில் மும்முரமாகிக் கொண்டிருக்க, ஒருநாள் தேவகி அக்கா, அவரின் உறவினரின் சுகவீனம் காரணமாக யாழ் போதனா வைத்தியசாலைக்கு அந்த உறவினரோடு போக வேண்டியிருந்தது. எப்போதாவது ஓடிக்கொண்டிருக்கும் தட்டிவானில் விடிகாலை புறப்பட்டு, இன்னொரு பஸ்ஸெடுத்து அவர்கள் யாழ் பெரிய ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கின்றனர்.

அந்தக் காலை வழமைபோல யாழ் நகரத்தில் விடிந்திருக்கின்றது. பதினொரு மணியளவில் தியாகு அம்மானின் இயக்கம் இந்திய இராணுவத்தோடு எங்கேயோ முட்டுப்பட்டு ஆஸ்பத்திரிப் பக்கமாக நுழைய, யாழ் கோட்டையில் இருந்து இராணுவம் ஆஸ்பத்திரியை நோக்கி செல்லடித்திருக்கின்றது. நிலைமை மோசமாகப் போகிறது என்பதை விளங்கிய டாக்டர்கள் அருகில் நடமாடிக் கொண்டிருந்த இயக்கக்காரர்களை ஆஸ்பத்திரியை விட்டு விலகிப் போகச் சொல்லவும் அம்மானின் இயக்கம் அந்த இடத்தை விட்டுப் போயிருக்கின்றது.

இப்படி நடந்தபிறகும் இந்திய இராணுவத்தின்



கோபம் அடங்கவில்லை. ஆஸ்பத்திரி வளாகத்தைச் சுற்றி வளைத்திருக்கின்றது. பின்னேரம் இரண்டரை மணியளவில் ஆமி ஆஸ்பத்திரி வளாகத்தை நோக்கிச் சரமாரியாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருக்கின்றது. ஆஸ்பத்திரிக்குப் போன தேவகி அக்கா உள்ளிட்ட அனைவரும் எப்படியாவது வெளியே தப்பி வந்துவிடவேண்டுமென அவதிப்பட்டிருக்கின்றனர். ஆனால், வெளியே போவதற்கான நிலைமை சுமூகமாகவில்லை.

ஆஸ்பத்திரிக்குள் நடந்த கோரதாண்டவத்தை அறிய அடுத்த நாள் மதியம் வரை நாங்கள் காத்திருக்க வேண்டியிருந்தது. அந்த செய்தி நமது ஊரை வந்தடைந்தபோது ஊரே அலறித்துடிக்கத் தொடங்கியிருந்தது. பெரியம்மாவும் அம்மாவும் குழறியதைப் பார்த்த பயத்தில் நான் சுவாமி அறையின் மூலையில் போய் பல்லியைப் போல ஒடுங்கினேன். என்ன நடந்ததென முழுதாய் அறியாமலே, என் உடல் நடுங்கத் தொடங்கியிருந்தது.

சுரேஷ் அண்ணாவின் ஓலம் எங்கள் வீடுகளின் கதவுகளில் அறைந்து எழும்பியபோது, முதன்முதலாக பெரியவர்கள் உபயோகிக்கும் கெட்டவார்த்தையை வைரவருக்குச் சொல்லித் திட்டினேன்.

அன்று தேவகி அக்காவோடு நானும் கூடவே போயிருந்தால், திரி ஸ்டார்காரர்களிடமிருந்து சுரேஷ் அண்ணாவை நிலத்தில் விழுந்து புரண்டு அழுது காப்பாற்றியதுபோல, தேவகி அக்காவையும் சுட்டுக்கொன்ற இந்திய இராணுவத்தின் கால்களில் விழுந்தாவது காப்பாற்றியிருக்கலாம் என்று என் இயலாமையை நினைத்து, நானும் பெருங்குரலெடுத்து அழத் தொடங்கினேன்.

இவ்வாறுதான் இயக்கங்களில் இணைந்து 'தீவிரவாதி'கள் ஆகும் அநேக குழந்தைகளின் கதைகள் ஆரம்பிக்கின்றன. ●

**"இளங்கோ"** <elanko@rogers.com>

# டி. கண்ணன் கவிதைகள்

## 1. இன்னொன்று

ஓங்காரத்தில் நீளும் வயலின்
பிரத்யேக மீன் தொட்டி முன்னமர்ந்து
'வாக்னர்' பயில்கிறேன்
அமைதியின் ஏகாந்தத்தில் மெல்ல அசைகின்றன மீனகள்
அவரோகணத்தின் முடிவில்
நீச்சல் கற்றேன்

## 2. சொப்பன கணம்

அருகாமை கரைகளுக்குள்
இடையே ஓடும் நதியில்
குதித்தேன்
அந்தி பூத்த நேரம்
பொன்னிற நதி
வானில் கூவம்
மேகங்களை சுமந்தபடிக்கு
திரியும் காளைகள்
மலரும் மழை
..
மூழ்கி எழுகையில்
எதிர்கரை இல்லை
கரைக்கு மீண்டு இயல்பை மீட்கஞ் மீண்டது எதிர்க்கரை

## 3. ஒரு முத்துக் கதை

நீராழி மண்டபத்தில்
முத்துக்கள் தூவப்பட்டன
முத்துக் குளித்துக் கொண்டிருந்தாள்
இளவரசி
மூன்று முக்குக்கு பிறகு
இளவரசியை காணோம்
கைது செய்யப்பட்டனர் தொழிகள் ●

**டி. கண்ணன்** <krishnaswamy164@gmail.com>

# தென் கிழக்காசிய நாடுகள்
# இந்தோனேசியா

**மு. ராஜேந்திரன்**

### இன்றைய இந்தோனேசியா

இந்தோனேசியா தீவுகளின் தேசம். இந்தோனேசியாவில் பதினெட்டாயிரம் தீவுகள் இருக்கின்றன. சுமித்ரா, ஜாவா, பாலி, காளிமந்தன், பாப்புவா கொய்னா என்று பெரும் தீவுகள். ஒவ்வொன்றும் ஆயிரம் கிலோமீட்டருக்கு அதிகமான நீளம். இருநூறிலிருந்து முந்நூறு கிலோமீட்டர் அகலம். இதில், எட்டாயிரம் தீவுகளுக்குப் பெயரிடப்பட்டிருக்கின்றன. பெயரிடப்படாத சுமார் பத்தாயிரம் சிறு தீவுகளும் உள்ளன. சிறிய தீவுகள் சுமார் ஒரு ஏக்கர் நிலப்பரப்பிலிருந்து இருபத்தைந்து ஏக்கர் நிலப்பரப்பு வரை இருக்கும். இவைகளுக்குப் பெயர் கிடையாது. இதைத்தவிர ஐந்து சென்ட், பத்து சென்ட் அளவில் எண்ணிலடங்காத குட்டியூண்டு தீவுகளும் உள்ளன.

இருப்பதிலேயே பெரியது, சுமித்திரா தீவு. ஜாவா அதற்கு அடுத்தாற்போல பெரியது. ஆனால், மக்கள் தொகை ஜாவாவில்தான் அதிகம். ஜாவாவில் வாழ்பவர்கள்தான் இந்தோனேசியாவின் அதிபராக முடியும். (நம் நாட்டில் உத்தரப் பிரதேச எம்.பி.தான் பிரதமர் ஆக முடிவதைப்போல்) சுமித்திராவிலும் ஜாவாவிலும் முஸ்லீம்கள் 98 சதவிகிதத்தினர் உள்ளனர்.

ஜாவா, சுமித்திரா தீவுகளைவிட பாலித் தீவு சற்று சிறியது. 800 கி.மீ. நீளம், 80 கி.மீ. அகலம் உடையது. கேளிக்கை விடுதிகள் அதிகம் உள்ள பகுதி. பாலியில் 80 சதவிகிதம் இந்துக்கள். பாப்புவா கொய்னா தீவின் பாதிப் பகுதியை இரண்டாகப் பிரித்து பாப்புவா நியூ கொய்னா என்ற புது நாடாக இந்தோனேசியா தற்போது அறிவித்துவிட்டது.



இந்தோனேசியாவிற்குச் சொந்தமான காளிமந்தன், ஒரு பெரும் தீவு. ஒரு காலத்தில் இந்து மதத்தின் பெயரால் இதற்கு காளி மைந்தன் என்று பெயர் இருந்திருக்கிறது. காளி மந்தனில் நிலக்கரி சுரங்கங்கள் அதிகம். 'தமிழ்நாடு மின்சார வாரியம் இந்தோனேசியாவிலிருந்து நிலக்கரி கொள்முதல் செய்து மின்வெட்டை தவிர்க்கும்' என்ற தகவலை தமிழ்ப் பத்திரிகைகளைத் தொடர்ந்து படிப்பவர்கள் பார்த்திருப்போம். 'இந்தோனேசியா' என்று பத்திரிகைகள் சொல்வது இந்த காளிமந்தன் தீவைத்தான்.

இந்தத் தீவின் தெற்கு மூலையில் உள்ள சிறு பகுதிதான் புரூனே. புரூனேவின் அரசர் உலகின் மிகப் பெரிய பணக்காரர். பெட்ரோலியப் பொருட்களால் கிடைத்த செல்வம். தொடர்ந்து மழை பெய்துகொண்டே இருக்கும் பகுதி. புரூனேவிற்கு சோழர்கள் காலத்தில் 'வருணன்' என்று பெயர் இருந்திருக்கிறது, அடைமழையை நினைவூட்டுவது போல.

புரூனேவிற்கு அடுத்தாற்போலுள்ள காளிமந்தன் (காளிமைந்தன்) போர்னியோ தீவில் 73 சதவிகிதம் நிலப்பரப்பில் உள்ளது. பெரும் நிலக்கரிச் சுரங்கங்களும், அழிந்து வரும் உயிரினமான உரான் குட்டான் குரங்குகளும் இருக்கும் பகுதி. இந்தோனேசியாவின் தெற்கு கடைசியில் இருக்கும் மேற்கு பப்பா நியூ கைனா (கிரியன் ஜெயா என்று இந்தோனேசியா அழைக்கிறது) விலிருந்து வடக்கே சுமத்திரா தீவின் ஆச் பகுதி வரை வடக்குத் தெற்கில் ஏறக்குறைய எட்டாயிரம் கி.மீ. தூரம். இந்தியாவின் வடக்கு தெற்காக கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீரின் லடாக் வரை மூவாயிரம் கி.மீ. என்றால் இந்தியாவைவிட இந்தோனேசியா ஏறக்குறைய இரண்டரை மடங்கு நீளம். அகலம் மட்டும் இந்தியா போல் அல்லாமல் மிகக் குறைவு. அகலம் 300 கி.மீ-க்கு மேல் இல்லை.

### புராண காலத் தொடர்பு

வால்மீகி ராமாயாணத்தில் இந்தோனேசியாவின் ஜாவாத் தீவு பற்றியும் களிமந்தன் தீவு பற்றியும் குறிப்பு இருப்பதாக இந்தோனேசிய மக்கள் நம்புகிறார்கள். சுக்ரீவனின் கோரிக்கையை ஏற்று இராமன் வாலியை வதம் செய்கிறான். வாலியை வதம் செய்த பின்பு சுக்ரீவன் அரசனாகின்றான். சீதையைத் தேடிக் கண்டுபிடிக்க வானர சேனைக்கு சுக்ரீவன் உத்தரவிடுகிறான். 'சீதாப் பிராட்டியை நான்கு திசைகளிலும் சென்று தேடுங்கள். ஸ்வர்ண தீபாவில் (மலேசியா) தேடுங்கள். ஸ்வர்ண பூமியில் (பர்மா) தேடுங்கள். கற்பூர தீபத்தில் (கற்பூர மரங்கள் நிறைந்த களிமந்தன் தீவு), சாவகத் தீவு (ஜாவா தீவு), லங்கா தீவு (இலங்கை) என ஓரிடம்கூட விடாமல் தேடுங்கள்' என்கிறான். வானரங்கள் ஒவ்வொரு தீவிற்கும் செல்கின்றன. இலங்கைக்குச் சென்ற அனுமன் சீதையைக் கண்டுபிடித்தான். ராமாயணக் காலத்திலேயே சாவகத் தீவு என்ற பெயரில் ஜாவாத் தீவு பிரபல்யமானத் தீவாக இருந்திருக்கிறது.

இந்தியாவில்கூட ராமாயணம், மகாபாரதம்



பிரம்பனான் மாரியம்மன் கோவில்

தெரிந்தவர்கள் குறைவு. ஆனால், இந்தோனேசியாவில் 87 சதவிகிதம் பேர் முஸ்லீம்கள் என்றாலும், இந்து மதத்தின் ராமாயண, மகாபாரதக் கதைகள் எல்லோருக்கும் தெரியும். ஊர் ஊருக்கு இரவில் தோல் பொம்மைகளை வைத்து பொம்மலாட்டம் நடத்துகிறார்கள். அதில் ராமாயண, மகாபாரதக் கதைகள் சொல்லுவார்கள். கதையைச் சொல்லுபவர்கள் அனைவரும் முஸ்லீம்கள்தான். இங்குள்ளவர்களுக்கு அகஸ்தியர், சிவன், விஷ்ணு, பிரம்மா என அனைத்து இந்துக் கடவுள்களின் வரலாறும் தெரியும். சிவன் கோயில்களுக்கு சண்டி என்று பெயர். அனுமனுக்கு பஞ்சோரன் என்று பெயர். அனுமான் சஞ்சீவி மலையை இங்கிருந்துதான் பெயர்த்து எடுத்து வந்தார் என்றும் நம்புகிறார்கள்.

### கல் ஆயுதங்கள்

இந்தோனேசியாவிலும் நம் ஊரைப் போன்றே பழமையான கல் ஆயுதங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஒரே வித்தியாசம், நமது ஊரின் பழங்கால ஆயுதங்கள் கருப்பு நிறக் கல்லில் இருக்கும். இந்தோனேசியாவில் வெள்ளைக் கல். மற்றபடி கல்லின் அமைப்பு எல்லாம் ஒரே மாதிரிதான். பெரிய மிருகங்களை வேட்டையாடுவதற்காக பெரிய கல் ஆயுதங்கள், சிறிய மிருகங்களை வேட்டையாடுவதற்காக சிறிய கல் ஆயுதங்கள், மிருகத்தின் மாமிசத்தைக் கூறு போடுவதற்குச் சிறுசிறு கல் ஆயுதங்கள் இந்தோனேசியாவில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

### இந்தோனேசியக் கல்வெட்டுகள்

இந்தோனேசியாவில் பிராமி எழுத்துக்களில் கல்வெட்டுகள் இருக்கின்றன. கி.பி. ஐந்து, ஆறாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் இருந்த எழுத்துருக்களே சுமித்திரா ஜாவா தீவுகளிலும் இருந்துள்ளன. 'மகாராஜா ஸ்ரீ நரேந்திய்யா புத்திர அஸ்வவர்மன் மூலவர்மன்' என்ற பெயர் ஒரு கல்வெட்டில் இருக்கிறது.

யோக்கிய கர்த்தா என்ற ஊருக்கு இருபத்தைந்து கி.மீ. தூரத்திலுள்ள பிரம்பனான் கோயிலுக்குள் இருந்த கி.பி. 782ஆம் ஆண்டு கல்வெட்டில் 'இந்திரனின் ஆணைப்படி ஒரு தர்மஸ்தாபனம் பிரம்பனான் கோயிலில் நடந்ததாகச்' சொல்லப்பட்டிருக்கிறது. நம் ஊர் சித்தன்னவாசல் குடிமியான்மலை கல்வெட்டுகள்போல மிக நேர்த்தியாக அச்சடித்தார் போல இங்குள்ள கல்வெட்டு எழுத்துக்களும் உள்ளன.

கி.பி. 788-ஆம் ஆண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டு பரநாகரி எழுத்தில் சமஸ்கிருதத்தில் உள்ளது. 'மகாராஜா தயா பங்காபனா கரியானா என்ற அரசன் கலாசன் கிராமத்திற்கு முழு வரிவிலக்கு அளித்து அந்தக் கிராமத்தின் வருவாயை தாரா தேவிக்கான ஒரு கட்டடம் கட்ட கொடுத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.' 5-ஆம் நூற்றாண்டில் பல்லவ, தமிழ், நாகரி எழுத்துக்களிலிருந்து இந்தோனேசியா மொழி பிறந்திருக்கிறது.

## கடல் பயணம்

உலகின் பல திசைகளிலிருந்தும் குறிப்பாக தமிழகம், குஜராத், ஜப்பான், சீனா, நெதர்லாந்து, பிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளில் இருந்து இந்தோனேசியா தீவுகள் நோக்கிய கடல் பயணம் கி.பி. 5-ஆம் நூற்றாண்டிலேயே தொடங்கியிருக்கிறது. முதன்முதலாக தமிழர்களே இந்தோனேசிய தீவுகளுக்குச் சென்றவர்கள். அடுத்ததாக ஜப்பானியர்களும் சீனர்களும் சென்றிருக்கிறார்கள். சீனா மற்றும் இந்தியாவிலிருந்து வந்த சமண, பௌத்தத் துறவிகளும், மேல் திசை நாடுகளிலிருந்து வந்த கிறிஸ்துவப் பாதிரியார்களும், அரேபியா மற்றும் குஜராத் பகுதிகளிலிருந்து வந்த முஸ்லீம் மதகுருக்களும் இந்தோனேசிய மக்களைத் தங்களது மதங்களுக்கு மதம் மாற்றும் முயற்சியில் ஈடுபட்டனர். பதினைந்தாம் நூற்றாண்டில் குஜராத்திலிருந்து வந்த முஸ்லீம் மதகுருமார்கள் இந்தோனேசியாவில் பெரும் அளவில் மதமாற்றம் செய்திருக்கிறார்கள்.

## இந்தியாவுடனான கலாச்சாரத் தொடர்பு

இந்தோனேசியாவில் பெருமளவில் முதுமக்கள் தாழிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இறந்தவர்களைப் பெரிய பெரிய மண் தாழிகளில் வைத்து புதைக்கும் வழக்கம் இந்தோனேசியாவிலும் இருந்திருக்கிறது. இறந்த மனிதர்களைப் புதைக்கும் இடத்தில் நான்கைந்து ஆள் உயரத்தில் பெரும் கற்களை வரிசையாக நட்டோ அல்லது வட்ட வடிவில் கற்களை நட்டோ அடையாளம் வைக்கும் பெருங்கற்காலப் பழக்கம் தமிழகத்திலும் கேரளத்திலும் இங்கிலாந்திலும் ஜாவாவிலும் இருந்திருக்கிறது. இதுபோன்ற அமைப்பு திருவண்ணாமலை மாவட்டம் தண்டராம்பட்டிலும், ஈரோடு காரிப்பாளையத்திலும், திருச்சூருக்கு அருகிலுள்ள ராஜகோபாலபுரத்திலும் இருக்கின்றன. தானியங்கள் அளப்பதற்கான மரத்திலானப் படிகள், மதிய நேரங்களில் பெண்கள் (சோம்பேறி ஆண்களும்) விளையாடும் மரத்தாலான பல்லாங்குழியும் இங்கு இருந்திருக்கிறது. மரத்தாலானப் பதினான்கு குழி மரப் பல்லாங்குழி. பம்பரம், கிட்டிப் புல், புல்லாங்குழல், மிருதங்கம் எல்லாமே இந்தோனேசியாவில் உள்ளன.

உலகில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட மிகப் பழமையான எலும்புக்கூடு ஜாவா மனிதனுடையது. ஜாவா தீவில் யூனி என்ற இடத்தில் இந்த எலும்புக்கூடு கண்டுபிடிக்கப்பட்டது. எலும்புக் கூட்டின் கைகளில் சிறு கற்களால் கோர்த்துக் கட்டப்பட்ட சிறு செயின் உள்ளது. (அப்போதே பிரேஸ்லெட்!) பிரேதத்தின் தலைக்குமேல் மண்பானை (தண்ணீர் வைக்கப்பட்டதாக இருக்கலாம்) இருக்கிறது. மண்பாண்டங்கள் கைப்பிடி வைத்த மூடியுடன் உள்ளன. ஆற்றுப்படுகையில் கிடைக்கும் கூழாங்கற்களைப் பயன்படுத்தி உருவாக்கிய ஆயுதங்கள் பல்வேறு அளவுகளில் பல்வேறு உருவங்களில் பிரேதத்திற்கு அருகில் இருக்கின்றன. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்லில் வடிக்கப்பட்ட தத்ரூபமான யானையின் பாதங்கள். உண்மையான யானையின் கால் தடங்கள் போலவே கல்லில் வடித்துள்ளார்கள். மாப்பிள்ளைக் கல் போன்று ஒரு பெரிய கல்லில் சமஸ்கிருத வாசகங்கள். அச்சு அசலான மனிதனின்



பாதமும் அதற்கு அடுத்தாற்போல் வடமொழி பிரஸ்திதியும் உள்ளன. பெருங் கற்காலத்தின் சுவடுகள் இன்றும் ஜாவாத் தீவில் இருக்கின்றன. நம் ஊரைப் போலவே கற்களை வட்டமாக நட்டு 'இந்த இடத்தில் பிரேதங்கள் புதைக்கப்பட்டிருக்கின்றன' என்பதை அடையாளப்படுத்தியிருக்கிறார்கள்.

## தமிழர்களுடனான தொடர்பு

சுமித்திரா தீவு மக்களுக்கு இந்தியர்கள் (குறிப்பாக தமிழர்கள்) என்றால் பெரும் பிரமிப்பு, மரியாதை. நாம்தான் அவர்களுக்கு கலாச்சார முன்னோர்கள் என்பதை அறிந்து வைத்திருக்கிறார்கள். நம்மைப் போலவே கொழுஞ்சி, சணப்பூண்டு, வாவரக்காச்சி, எருக்க இலை தழைகளை விவசாய நிலங்களுக்குப் போட்டு நிலத்தில் ஊற வைக்கிறார்கள். பத்து பதினைந்து நாட்கள் வயலில் இந்தத் தழைகள் ஊறி மக்கியவுடன் உழுகிறார்கள். நாற்றங்காலில் விதை விதைத்து இருபத்தைந்து நாட்கள் கழித்து நாற்றைப் பறித்து நல்ல இடைவெளிவிட்டு நடவு செய்கிறார்கள். வயல்களின் நடுவே சிறு குடிசை அமைத்திருக்கிறார்கள். வயலின் ஓரங்களில் காய்கறிச் செடிகள், நான்கு ஐந்து கரும்புச் செடிகள், மாமரம், கொய்யா மரம், பப்பாளி மரங்கள் ஆகியவை ஒவ்வொரு வரப்பிலும் கட்டாயம் உள்ளன.

## போர்ச்சுக்கீசியர்கள் வருகை

இந்தோனேசியாவை போர்ச்சுக்கீசியர்கள் 'இன்டீஸ் ஐலேண்ட்' என்றும் 'நுசான்டிரா' என்றும் அழைத்தனர். இங்கிருந்து துணி, மரப் பட்டை, மிளகு, மரம், அரிசி, பழங்கள், வாசனைப் பொருட்கள், மனித அடிமைகள் என வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி ஆகியிருக்கின்றன. பட்டாவியா என்ற பெயரைக் கேட்டாலே 17-ஆம் நூற்றாண்டின் கிழக்கு ஆசியாவும், கோவாவும், கேரள கடற்கரையும் மிரண்டிருக்கும். தற்போது தலைநகர் ஜகார்த்தாவின் புறநகர்ப் பகுதியாகிவிட்ட பட்டாவியா, நானூறு ஆண்டுகளுக்கு முன்பு போர்ச்சுகீசியர்களின் தென்கிழக்கு ஆசியாவிற்கான தலைமையகம். போர்ச்சுக்கீசியக் கம்பெனியின் அனைத்து உத்தரவுகளும் பட்டாவியாவிலிருந்துதான் வரும். போர்ப்படைகளும் இங்கிருந்துதான் கிளம்பும். சாலைகளின் இருபுறமும் கம்பீரமாக நின்று கொண்டிருக்கும் பழங்காலப் போர்ச்சுக்கீசியர் மற்றும் டச்சுக் கட்டடங்களை இன்றும் பார்க்கலாம்.



சேவல்சண்டை ஓவியங்கள்

## டச்சு ஆதிக்கமும் இந்து அரசின் வீழ்ச்சியும்

டச்சுக் கிழக்கிந்திய கம்பெனிக்கு VOC என்று சுருக்கப் பெயர். கம்பெனியின் கவர்னர் ஜான் பீட்டர்சன் கோகன் என்பவன். ஜாவா இந்து அரசரின் எதிர்ப்பையும் மீறி ஜெயகர்த்தாவில் கல்கோட்டை ஒன்றைக் கட்டினான். இந்து அரசர் வயதானவர் என்பதால் வேறு வழியின்றிப் பொறுத்துக்கொண்டார். ஆனால், இளவரசன் ஜெயகர்த்தா விஜயகர்மாவுக்குப் பொறுமை இல்லை. கோபம் வந்துவிட்டது. ஆங்கிலேயர்களின் உதவி பெற்று டச்சு கவர்னர் கோகனை 23.12.1618-இல் தாக்கினான். ஆறு, ஏழு நாட்கள் டச்சு கவர்னர் கோகன் தாக்குப் பிடித்தான். டிசம்பர் 31 அன்று மலேசியாவிலுள்ள மலாக்காவிற்குத் தப்பி ஓடினான். சரியாக ஒரு மாதம் கழித்து, 31 ஜனவரி அன்று (31.10.1619) ஜெயகர்த்தா இளவரசனும் ஆங்கிலேயர்களும் நட்பு உடன்படிக்கை செய்துகொண்டனர். பான்டன் பகுதியில் இருந்த மற்றொரு இந்து அரசனுக்கு இந்த நட்பு உடன்படிக்கை பிடிக்கவில்லை. பான்டன் அரசன் ஜெயகர்த்தாவிற்கு எதிரி ஆனான். பிப்ரவரி 1-ஆம் தேதி பான்டனின் படைகள் ஜெயகர்த்தாவிற்கு வந்தன. யுத்தம் வந்தால் தோற்று விடுவோம் என்று பயந்த ஆங்கிலேயத் தளபதி டேல், ஜெயகர்த்தா இளவரசனிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஜெயகர்த்தாவை விட்டுக் கிளம்பிவிட்டான். ஜெயகர்த்தா இளவரசன் தனித்து விடப்பட்டான். பான்டன் அரசன் இளவரசனைக் கைது செய்து நாடு கடத்தினான்.

மலாக்காவில் பதுங்கியிருந்த ஆங்கிலேய கவர்னர் கோகனுக்கு இந்தத் தகவல் கிடைத்தது. ஆயிரம் வீரர்களோடு மலாக்காவிலிருந்து கிளம்பிய கோகன் 1619-ஆம் ஆண்டு மே 30 அன்று ஜெயகர்த்தா வந்து சேர்ந்தான். வந்ததும் நகரைக் கைப்பற்றினான். ஜெயகர்த்தா என்ற இளவரசனின் பெயரில் நகர் இருந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை. தனது டச்சு தேசத்திலிருந்த ஒரு நகரின் பெயரான பட்டாவியா என்ற பெயரை ஜெயர்கத்தா நகருக்குச் சூட்டினான். (பின்பு ஜெயகர்த்தா என்ற இந்துப் பெயர் மாற்றப்பட்டு ஜகார்த்தா ஆகிவிட்டது.)

நானூறு ஆண்டுகளுக்கு முன்பு பட்டாவியா நகர் மிகப் பிரபலமானது. வியாபாரக் கப்பல்கள் பட்டாவியா நகருக்கு வந்தன. பெரிய பெரிய கட்டடங்கள் பட்டாவியாவில் கட்டப்பட்டன. சீனா, இங்கிலாந்து என்று எந்த தேசத்திற்குச் சென்றாலும், கப்பல்கள் பட்டாவியாவில் நின்றுதான் செல்லும். பட்டாவியாதான் அடிமை வாணிபத்தின் தலைமையிடம். உள்ளூர் அடிமைகள், வெளியூர் அடிமைகள் என்று அடிமை வியாபாரம் மிக விறுவிறுப்பாக நடந்த ஊர். மடகாஸ்கர், தெற்கு ஆப்பிரிக்கா, கிழக்கு ஆப்பிரிக்கா, வங்காளம் என்று பல பகுதிகளிலிருந்தும் மனித அடிமைகள் இங்கு அழைத்து வரப்படுவர். இங்குள்ள பழங்குடியினருடன் ஒன்று சேர்க்கப்பட்டு மனிதர்கள் ஏலத்தில் விடப்படுவர். யார் அதிகப் பணம் கொடுக்கிறார்களோ அவர்களோடு மனித அடிமைகள் அனுப்பி வைக்கப்படுவர். டச்சு அரசின் VOC கம்பெனி அடிமை வாணிபத்தில் மற்ற ஐரோப்பிய நாடுகளைப் பின்னுக்குத் தள்ளி யாரும் நெருங்க முடியாத முதலிடத்தில் நின்றது.

## அடிமை வியாபாரம்

ஓர் ஆண் அடிமையின் விலை ஒரு மூட்டை அரிசியின் விலையைவிட நாற்பத்தைந்து மடங்கு அதிகம். அந்தக் காலகட்டத்தில் ஒவ்வொரு டச்சு அதிகாரியின் வீட்டிலும் நிறைய மனித அடிமைகள் வேலை செய்வார்கள். எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான அடிமைகள் ஒரு வீட்டில் இருக்கிறார்களோ அவ்வளவுக்கு அவர் வசதியானவர் என்று பொருள். டச்சு கவர்னர் ஜெராமிஸ் ரெம்ஷக் (1775 - 1777) என்பவர் வீட்டில் முந்நூறு அடிமைகள் இருந்தார்களாம். 19-ஆம் நூற்றாண்டு வரை பட்டாவியாவின் மக்கள் தொகையைவிட நகரின் அடிமைகள் எண்ணிக்கை அதிகம். 1860-இல் அடிமை வியாபாரம் சட்டப்பூர்வமாக ஒழிக்கப்படும்வரை பட்டாவியா நகர் அடிமை வியாபாரத்தின் முக்கிய கேந்திரமாக இருந்தது.

## பென்கோலன் கோட்டை: தென்னிந்தியப் புரட்சியின் சமாதி

மருதுபாண்டியர்களும் ஊமைத்துரையும் 1801-ஆம் ஆண்டு அக்டோபர், நவம்பர் மாதங்களில் தூக்கிலிடப்பட்டனர். பிப்ரவரி 1802-இல் தூத்துக்குடியிலிருந்து மருதுபாண்டியர்களின் பேரன் 12 வயது சிறுவன் துரைசாமியுடன் எழுபத்து இரண்டு போராளிகளையும் ஏற்றிக்கொண்டு கிழக்கிந்தியக் கம்பெனிக்குச் சொந்தமானக் கப்பல் பினாங்கு தீவிற்குக் கிளம்பியது. எண்பது நாட்கள் கடல் பயணத்தில் பினாங்குத் தீவிற்கு வந்தது. அங்கு பதினைந்து நாட்கள் இருந்துவிட்டு சிவகங்கை அரசர் வெங்கம் பெரிய உடையணத் தேவருடன் சேர்த்து வாராப்பூர் ஜமீன்தார் பொம்ம நாயக்கர், கோம்பை ஜமீன்தார் பாண்டி நாயக்கர், ராமநாதபுரம் அமில்தார் ஜகந்நாத அய்யர் உள்ளிட்டோர் சுமித்திராவிலுள்ள பென்கோலனுக்கு அனுப்பப்பட்டனர். 1802-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பென்கோலன் வந்த வெங்கம் பெரிய உடையணத் தேவர் ஐந்து மாத காலம் சுமித்திரா தீவில் சிறை வைக்கப்பட்டிருந்தார். அங்குதான் அவருக்கு மரணம் சம்பவித்தது.

முந்நூறு ஆண்டுக்களுக்கு முன்பு மனித அடிமைகளை ஏற்றுமதி செய்யும் துறைமுகம் பென்கோலன் தீவுதான். வடிவான உடலமைப்புடன்


ஜாகர்தா

கூடிய மக்கள், சொன்ன வேலையை எவ்வளவு நேரமென்றாலும் அலுப்பு காண்பிக்காமல் செய்வார்கள் என்ற நல்ல பெயர் சுமித்திரா தீவின் அடிமைகளுக்கு உண்டு. அதேபோல இந்தோனேசியப் பெண் அடிமைகளை ஐரோப்பியச் சீமாட்டிகள் மிகவும் விரும்புவர். மிகுந்த மரியாதையுடனும் மிகக் குறைந்த எதிர்பார்ப்புகளுடனும் வேலை செய்வார்களாம்.

இந்தோனேசியாவின் பெரும் துயரம் ஒன்று உண்டு. இந்தத் தேசத்தின் கொசுக்கள் மிகவும் கொடுமையானவை. மலேரியா காய்ச்சலில் ஐரோப்பியர்கள் அதிகம் இறந்தது இந்தோனேசியாவில்தான். அதனால், ஐரோப்பியர்கள் கோட்டைகளைத் தற்காலிகமாக மூடிவிட்டு கல்கத்தாவிற்குத் திரும்பிவிடுவர்.

## நேரடி நிலவரி

1816-ஆம் ஆண்டு வரை அதாவது லெப்டினென்ட் கவர்னர் டி.எஸ். ராபிள்ஸ் (சிங்கப்பூரை உருவாக்கியவர்) காலம்வரை நிலவரி உள்ளூர் ஜமீன்தாரர்கள் மூலமாக வசூலிக்கப்பட்டிருக்கிறது. ஜமீன்தார்கள் பொதுமக்களைக் கசக்கிப் பிழிந்து நிலவரி வசூல் செய்வதாகப் பரவலான புகார் இருந்திருக்கிறது. இதனால், பொதுமக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டதாக லெப். கவர்னர் ராபிள்ஸ் உணர்ந்தார். அடிமை முறை, கட்டாய வேலை போன்ற மனிதாபிமானமற்ற முறைகளை ஒழிக்க நினைத்த லெப். கவர்னர் ராபிள்ஸ், ஜமீன்தார் முறையை ஒழித்தார். உழைப்பவர்களுக்கு நிலத்தை ஒதுக்கி அவர்களிடமே வரி வசூல் செய்தார். ஆனால், அடிமை முறையை ஒழிக்க நினைத்த அவருக்கு கம்பெனி அனுமதி வழங்கவில்லை.

## வளம்

இந்தோனேசியாவில் கடல் பகுதி அதிகம். பொதுவாக நாடுகளின் நிலப்பரப்பு, அதன் கடல் பரப்புக்குச் சரிசமமாக இருக்கும் அல்லது நிலப்பரப்பைவிட, கடல் பரப்பு ஒரு மடங்கு அல்லது ஒன்றரை மடங்கு அதிகமாக இருக்கும். இந்தோனேசியாவின் கதையே வேறு. இந்தோனேசியாவின் நிலப்பரப்பைவிட அதனுடைய கடல் பரப்பு ஏறக்குறைய 5 மடங்கு அதிகம். கணக்கில்லாத தீவுக் கூட்டங்கள் இருப்பதினால் இந்தோனேசியாவிற்கு மிகப் பெரிய கடல் வளம் சொந்தமாகியிருக்கிறது. மீன் வளத்திற்கும் குறைவில்லை.

இந்தோனேசியாவில் மழை அதிகம். நம்மைவிட மூன்று மடங்கு. வாரத்தில் மூன்று நாட்கள் மழை பெய்யும். ஜூன் முதல் நவம்பர் வரை தினமும் மழை பெய்யும். இதோடு மதிய வெயிலும் மிகவும் உக்கிரமாக இருக்கும். ஆகவே, பிரம்புத் தொப்பி அவசியம். குளம், ஏரி, குட்டைகளில் மீன் வளம் அதிகம். இதனால்தான் இந்தத் தேசத்தில் மீன் பிடிக்கும் தொழிலை ஒரு கலையாகவே வளர்த்திருக்கிறார்கள். மீன் பிடிப்பதற்கென்று நூற்றுக்கும் மேற்பட்ட வெவ்வேறு வடிவங்களில், வெவ்வேறு அளவில் மூங்கில் கூடைகள் உள்ளன. ஆழ்கடலில் மீன் பிடிக்க, வேகமாக ஓடும் ஆற்றில் மீன் பிடிக்க, குளத்தில் மீன் பிடிக்க, தண்ணீருக்கு மேற்பரப்பில் திரியும் மீன்களைப் பிடிக்க, ஆழத்தில் திரியும் மீன்களைப் பிடிக்க என்று பல்வேறு வகை மீன் பிடி சாதனங்கள் இங்கு உள்ளன. ஆற்று மீன், குளத்து மீன், கடல் மீன், வாய்க்கால் மீன் என்று எல்லா வகை மீன்களும் இங்குள்ளன. மீன் பிடிக்கச் செல்லும் மரக்கலங்கள் உண்மையிலேயே கலப்படமில்லாத அக்மார்க் வகை மரக் கலங்கள். மரத்தோடு இரும்பு சேர்த்துப் படகுகள் கட்டப்படுவதில்லை. பெரும் மரத்தைக் குடைந்து படகாக மாற்றிக்கொள்கிறார்கள். படகை மிதக்கவிட்டு, அதில் சென்றுதான் மீன் பிடிப்பார்கள்.


போராபுதூர் பௌத்தக் கோயில்

மற்ற தேசங்களில் மீன் பிடித்தல் ஒரு தொழில் என்றால் இங்கு ஒரு கலை.

## ஜாதிக்காயின் பிறப்பிடம்

சுமித்திரா தீவில் மட்டுமே விளையும் ஜாதிக்காய்க்குப் பெரும் கிராக்கி உண்டு. ஜாதிக்காய் வயிற்று வலிக்கு மருந்து. ஜாதிக்காயை தேனோடு கலந்து சாப்பிட்டால் வயிற்று வலி சரியாகிவிடுமாம். ஜாதிக்காய் போதை வஸ்தும்கூட. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிகளில் குடிகார ஐரோப்பியர்கள் ஜாதிக்காயை வாயில் போட்டு மென்று கொண்டு ராஜ போதையில் இருப்பார்களாம். ஜாதிக்காயைக் கூடுதலாக எடுத்துக்கொண்டால் மரணம் சம்பவிக்கும் என்பதால் ஐரோப்பிய மருத்துவர்கள் குடிகாரர்களின் உடல் தகுதியை வைத்து ஜாதிக்காய் உட்கொள்ளும் அளவை நிர்ணயித்திருக்கிறார்கள்.

## சில காலம் சுதந்திரக் காற்று

இரண்டாம் உலகப் போரின்போது இந்தோனேசியாவை ஜப்பானியர்கள் ஆக்கிரமித்துக் கொண்டனர். இரண்டாம் உலகப் போர் முடிந்த போது இந்தோனேசியாவை விட்டு ஜப்பான் வெளியேறியது. விடுதலைப் பெற்ற இந்தோனேசியா பத்து, பதினைந்து நாட்கள் மட்டும் சுதந்திர நாடாக இருந்தது. பின்பு டச்சு நாட்டினரிடம் இந்தோனேசியா ஒப்படைக்கப்பட்டது. ஐந்து ஆண்டுகள் டச்சுக் காலனி ஆட்சி நடந்தது. டச்சு ஆட்சிக்கு எதிராக இந்தோனேசியாவில் விடுதலைப் போராட்டம் துவங்கியது. விடுதலை இயக்கத் தலைவர் சுகார்னோவை டச்சுக் காலனி அரசு கைது செய்து பென்கோலன் தீவில் தனிமைச் சிறையில் வைத்தது. ஐந்தாண்டுகள் கழித்து நெதர்லாந்தின் டச்சு அரசாங்கம் இந்தோனேசியாவிற்குச் சுதந்திரம் கொடுத்தது. சுதந்திரம் பெற்றபோது ஏறக்குறைய அறுநூறு சுல்தான்கள் இந்தோனேசிய தீவுகளில் இருந்தார்கள். பாலி தீவுகளில் மட்டும் இந்து சிற்றரசர்கள். மற்ற தீவுகளில் முஸ்லீம் சுல்தான்கள். இவர்களை இந்தியாவின் 'இரும்பு மனிதர் வல்லபாய் பட்டேல்' போல் இந்தோனேசியாவின் சுகார்னோ, ஹட்டா என்ற இரட்டையர்கள் ஒருங்கிணைத்தார்கள். சுதந்திரம் பெற்ற பிறகு சுகார்னோ ஜனாதிபதியாகவும், அவருக்கு அடுத்த நிலையில் வக்கீல் என்ற பதவி பெயரில் துணை ஜனாதிபதியாக ஹட்டாவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். (இன்றைக்கும் இந்தோனேசிய அரசு செய்தி வெளியீடுகளில், அனைத்து அரசு விளம்பரங்களிலும் ஜனாதிபதியும் அவருக்குத் துணையாக (வக்கீல்) துணை ஜனாதிபதியும் கூட்டாகப் புகைப்படத்தில் காட்சி அளிப்பர்).

## மக்களின் பொது குணம்

இந்தோனேசியாவில் மக்கள் சொகுசு வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டவர்கள். இவர்களுக்கு ஓய்வு முக்கியம். இவர்களுக்கு வாழ்வில் பெரிதாக எதிர்பார்ப்புகள் ஏதும் கிடையாது. கிடைப்பதைக் கொண்டு வாழ்பவர்கள். அதனால்தான், இந்த ஊரில் பெரிய பணக்காரர்கள் என்று தனிக் கூட்டமோ, மிகவும் வசதியற்றவர்கள் என்று ஒரு பெருங்கூட்டமோ கிடையாது. எல்லோருக்கும் உணவுக்கு வழியுண்டு. தங்குவதற்கு குடியிருப்பு உண்டு.

## ஏற்றுமதி

மிளகு, சந்தன மரம், யானைத் தந்தம், கற்பூரம், துணி வகைகள், உப்பு, இலவங்கம் போன்றவை இந்தோனேசியாவிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகியிருக்கின்றன. கரும்பின் பிறப்பிடம் இந்தோனேசியாதான். உலோக வேலைப்பாடுகளில் இந்தோனேசியர்கள் மிகுந்த திறமைசாலிகளாக இருந்துள்ளனர். கோயில் மணிகள், போர்க்கருவிகள், கவசங்கள், கத்திகள் ஆகியவைகளை மிக நேர்த்தியாக



வடிவமைக்கிறார்கள்.

### தேசிய உடை

இந்தோனேசியாவின் தேசிய உடை பொட்டிக். பொட்டிக் தயாரிப்பது எளிது. ஒரு வெள்ளைத் துணியை மேசைமீது பரத்தவேண்டும். மெழுகும் அரக்குக் கலர் பொடியும் சேர்ந்த கலவையைச் சட்டியில் கொதித்து வைக்கவேண்டும். மரத்திலான அச்சை, கொதிக்கும் அரக்குக் குழம்பில் லேசாகத் தோய்க்கவேண்டும். பின்பு அதை, பரத்தி வைக்கப்பட்ட வெள்ளைத்துணியில் நிதானமாக வைத்து வைத்து எடுக்கவேண்டும். வெள்ளைத் துணியில் டிசைன்கள் உருவாகும். இதுதான் பொட்டிக். இந்த உடை போட்டிருந்தால் அவர் இந்தோனேசியர். இந்த பொட்டிக் உடையோடு சேர்த்து தலையில் கருப்புத் தொப்பியும் போட்டிருந்தால் அவர் இந்தோனேசிய அரசியல்வாதி.

### மத மாச்சரியங்கள் இல்லை

இந்தோனேசியாவின் சிறப்பே தங்களது கலையை, பாரம்பரியத்தைப் பாதுகாத்தலும் அதைத் தங்களது பொருளாதாரத்திற்காகப் பயன்படுத்திக் கொள்வதும்தான். இந்தோனேசியாவில் இந்துக் கோயில்கள், புத்தமத விகாரங்கள் ஆகியவை இருந்தாலும், பெரும் பாலான மக்கள் முஸ்லீம் என்பதால் இந்துக் கோயில்களிலும் புத்த விகாரங்களிலும் வழிபாடுகள் இல்லை. கர்ப்பகிரகத்திற்குள் காலணியுடன் உட்கார்ந்து லிங்கத்தின் மீது கைபோட்டுக் கொண்டு கைபேசியில் போட்டோ எடுத்துக்கொள்ளலாம். கோயிலுக்குள் செல்ல உள்ளூர் ஆட்களுக்கு கட்டணம் இல்லை. வெளிநாட்டினருக்கு நுழைவுக் கட்டணம் மிக அதிகம். நம் ஊர் கணக்கில் குறைந்தது ஆயிரம் ரூபாயாவது நுழைவுக் கட்டணமாகத் தர வேண்டும். ஆப்கானிஸ்தானில் நூறடி புத்தர் சிலையை வெடி வைத்து தகர்த்த முஸ்லீம் அறிவாளிகள்போல் இல்லாமல், இந்தோனேசிய முஸ்லீம் மக்கள் தங்கள் முன்னோர்களின் இந்து மதத்தை மதிப்பவர்களாக உள்ளனர். மதிப்பு தருவதுடன் மட்டுமல்லாமல் இந்து, பௌத்தக் கோயில்களை வருமானம் தரும் அமைப்புகளாகவும் வைத்துள்ளனர்.

### தொன்மக் கதை

இந்தோனேசியாவில் தொன்மக் கதை ஒன்று சொல்லுகிறார்கள். 'ஓர் அழகான வெள்ளைத் தோல் இளவரசியாம். அவள் ஒரு நாயை வளர்த்து வந்தாளாம். இளவரசிக்குத் திருமண வயது வந்தவுடன் மணமகன் தேடினார்களாம். கிடைக்கவில்லையாம். ஒரு நாள் இளவரசி நெசவு நெய்து கொண்டிருந்தாளாம். அறைக்கு வெளியே நெசவுக் கருவி தெருவில் விழுந்துவிட்டதாம். தெருவில் ஆள் நடமாடும் சத்தம் கேட்டதாம். அந்தச் சத்தம் ஒரு மனிதப் பிறவி உருவாக்கியது என்று நினைத்துக்கொண்ட இளவரசி, 'நீ யாராக இருந்தாலும் பரவாயில்லை நான் தவறவிட்ட நெசவுக் கருவியை என்னிடம் எடுத்து வந்துகொடு. நீ ஓர் ஆணாக இருந்தால் உன்னை மணந்து கொள்கிறேன். பெண்ணாக இருந்தால் உன்னை எனது சகோதரியாக ஏற்றுக்கொள்கிறேன்' என்றாளாம். அவள் எதிர்பார்க்காதது நடந்துவிட்டது. கீழே கிடந்த நெசவுக் சுருவியை அவள் வளர்ப்பு நாய் கவ்விக்கொண்டு வந்துவிட்டது. அது ஓர் ஆண் நாய். கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டுமே?



வேறு வழியின்றி அந்த நாயை இளவரசி திருமணம் செய்துகொண்டாளாம். அவர்களுக்கு ஓர் அழகான ஆண் குழந்தையும் பிறந்ததாம்.

ஒரு நாள் இளவரசி தனது மகனை அழைத்துத் தனக்கு ஓர் இளமையான மானின் இதயம் வேண்டும் என்கிறாளாம். மகன் வேட்டையாடச் சென்றிருக்கிறான். (தந்தை) நாயும் அவன்கூட சென்றிருக்கிறது. அன்று எவ்வளவோ முயன்றும் மான் வேட்டை அமையவில்லை. இளவரசன் பார்த்தான். தாயின் விருப்பத்தை நிறைவேற்ற (தந்தை) நாயைக் கொன்று, அதன் இதயத்தை, 'மானின் இதயம்' என்று சொல்லி தாயிடம் கொடுத்தான். உண்மையைத் தெரிந்துகொண்ட தாய் சோற்றுக் கரண்டியால் மகனின் தலையில் அடித்து அரண்மனையை விட்டு விரட்டிவிட்டாளாம்.

இளைஞன் தேசாந்திரியாக ஊர் சுற்றினான். நிறைய ஊர் சுற்றியதால் பழையவைகளை மறந்துவிட்டான். ஒரு நாள் ஓர் அழகிய (இளம் பெண் அல்ல) பெண்ணைப் பார்த்து காதல் வயப்படுகிறான். பார்த்தவுடன் இருவருக்கும் பிடித்துப்போய் விடுகிறது. இருவரும் ஒன்றாக இணைந்துவிட்டனர். திருமணம் செய்துகொள்ள முடிவெடுத்தபோது, இளைஞனின் தலைக் காயத்தை அந்தப் பெண் பார்த்து விடுகிறாள். 'அடக் கடவுளே! இது தன் மகனல்லவா' என்று உணர்கிறாள். அனைத்தையும் அவனிடம் வெளிப்படையாகச் சொல்ல அவளுக்கு மனம் வரவில்லை. ஆகவே, திருமணம் செய்துகொள்ள ஒரு நிபந்தனையை விதிக்கிறாள். 'இங்கே ஓடும் சிட்டாரு நதியை ஒரு ஏரியாக்க வேண்டும். அந்த ஏரியில் ஒரு படகு விடவேண்டும். இந்த இரண்டு வேலைகளையும் ஒரே இரவில் செய்து முடி. அப்போது உன்னைத் திருமணம் செய்துகொள்கிறேன்' என்றாள். இளைஞனும் விஷயம் ஏதும் தெரியாமலேயே நிபந்தனைகளுக்கு ஒப்புக்கொள்கிறான். இளைஞன் பெண்ணின் நிபந்தனைகளை நடைமுறைப்படுத்த கிளம்பிவிட்டானாம்.

ஒரு பெரிய மரத்தை வெட்டி அதைப் படகாக்கினான். ஒரு பூதத்திடம் விஷயத்தைச் சொல்லி அந்த பூதத்தின் உதவியால் நதியை ஏரியாகவும் ஆக்கிவிட்டான். இளைஞன் எப்படியும் நிபந்தனையை முழுவதுமாக நடத்திக்காட்டி விடுவான் என்று பெண்ணிற்குத் தெரிந்துவிட்டது. ஓர் இரவுக்குள் சொன்னதை எல்லாம் செய்துவிடுவான் என்று புரிந்துகொண்ட அவள் ஓர் உபாயம் செய்திருக்கிறாள். கடவுளை வேண்டிக்கொண்டு வெள்ளைத் துணியை வீசினாளாம். உடனே இரவு முடிந்து விடிந்து விட்டதாம். சூரியன் வெளிப்பட்டுவிட்டது.

பெண் தன்னை ஏமாற்றிவிட்டாள் என்று இளைஞனுக்குத் தெரிந்துவிட்டது. கட்டிய ஏரியை உடைத்துவிட்டான். படகை சூரியனை நோக்கி எரிந்தான். பெண்ணைத் தேடிச் சென்றான். அவளை எங்கும் காணமுடியவில்லை. அவள் ஜாக்ஸி மலராக மாறிப்போனாள். கடைசிவரை அந்தப் பெண் தனது தாய்தான் என்று தெரிந்துகொள்ளாத இளைஞன் மலைக்காடுகளில் சுற்றி அலைந்து மறைந்துபோனான். இதுதான் அந்தக் கதை.

## முன்னாள் அரசர்கள்

இந்தோனேசியா ஒரு பெரிய தேசம். இரண்டாம் உலகப் போருக்குப் பின்பு சுதந்திரம் அடைந்தபோது இந்தத் தேசத்தில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட அரசர்களும் சுல்தான்களும் இருந்தார்கள். அவர்கள் சிரஞ்சீவிகள். போர்ச்சுகீசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் ஆட்சியின் போதும் மற்றும் இரண்டாம் உலகப் போரில் ஜப்பானின் நான்கு ஆண்டுகள் ஆக்கிரமிப்பின் போதும் இந்த அரசர்களும் கோலோச்சிக் கொண்டுதான் இருந்தார்கள். வெளிநாட்டு ஆக்கிரமிப்பாளர்களுக்கு இவர்களது தயவு தேவைப்படும். ஆதலால், ஆக்கிரமிப்பாளர்கள் அனைவரும் ஓரளவிற்கு அரசர்களுக்கும் சுல்தான்களுக்கும் மரியாதை கொடுத்து வந்துள்ளனர். அதனால், இப்பவும் இங்கு அரசர்களுக்கும் சுல்தான்களுக்கும் மரியாதை உண்டு. ஆனால், அதை அவர்கள் பெரிதாகப் பயன்படுத்திக் கொள்வதில்லை. இந்தியாவைப்போல இங்கு ள்ள முன்னாள் அரசர்கள், சுல்தான்கள், எம்.பி. எம்.எல்.ஏ. தேர்தலில் நிற்பதில்லை.

## நீர்ப்பாசனம்

இந்தோனேசியாவில் சாலையின் இருபுறமும் பச்சை மூங்கில்களும், துரியன் மரங்களுமாக இருக்கும். இவையெல்லாம் தானாக முளைத்தவை. மலைகளே வித்தியாசமாக இருக்கின்றன. அரை கிலோமீட்டர் அடர்ந்த காடு. அடுத்து அரை கிலோ மீட்டர் நெல் வயல்கள். நிலங்களுக்கு வரத்துக் கால்கள் கூட இல்லாமல் இருக்கும். வாரத்தில் மூன்று நாட்கள்





மழை பெய்வதால் வரத்துக் கால்வாய்கள் தேவையில்லை. ஆனால், வடிகால் நிச்சயம் இருக்கும். காரணம் மிக அதிகமான தண்ணீர் வசதி. தண்ணீர் வந்து சேரும் சிறு வரத்துக் காலிலும் தண்ணீர் ஆடி அசைந்து வராது. வேகமாக வீச்சுடன்தான் வரும். வயல்களில் தண்ணீர் பாய்ந்தப் பின் கூடுதலாக வரும் தண்ணீரைப் பெரிய வடிகால்களில் சேர்த்துவிட்டு விடுகிறார்கள்.

அது பெரும் கால்வாயாக ஓடும். நம் ஊரில் தண்ணீர் வரத்துக்கால் பெரிதாக இருக்கும். தேவைக்குப் போக தண்ணீரை வெளியேற்றும் வடிகால் சிறியதாக இருக்கும். சில சமயம் வடிகால் இல்லாமல் இருக்கும். ஒரு நிலத்தில் பாய்ந்து முடிந்தவுடன் அடுத்த நிலத்துக்குப் பாய்வது போல கூட இருக்கும்.

நம் நாட்டிற்கும் இந்தோனேசியாவிற்கும் பெரிய வித்தியாசம் ஒன்றுள்ளது. நமது ஊரில் விவசாய வேலை என்பது மத்திம வயதினருக்கு என்று விதிக்கப்பட்டுவிட்டது. இளம் பிராயத்தினரை நம் ஊர் வயல்களில் பார்க்க இயலாது. (மிக வயதானவர்களுக்கு நூறு நாள் வேலை.) ஆனால், இந்தோனேசியாவில் இளம் வயதினர் வயல்களில் வேலை செய்கிறார்கள். ஒவ்வொருவர் தலையிலும் பிரம்பாலான குரங்குத் தொப்பி (தேசிய உடை!) போட்டிருக்கிறார்கள்.

வாய்க்கால்கள் மிக நேர்த்தியாக இருக்கும். வருடா வருடம் வாய்க்கால்களைப் பராமரிக்கிறார்கள். வாய்க்கால்களில் வரும் தண்ணீரை மடை மாற்றிவிட மரப்பலகையினால் ஆன திறப்பிகள் இருக்கும். ஒரு வயல்கூட விவசாயம் செய்யப்படாமல் இருக்காது. முட்களோ, தேவையில்லாத செடி கொடிகளோ இருக்காது. டிராக்டர்களும் அதிகம் கிடையாது. எருதுகள்தான் உழுகின்றன. வயல்களில் களைகள் ஏதும் இருக்காது. விவசாயக் கூலிகள் நல்ல உடைகளை அணிந்திருப்பார். ஆண்கள் ட்ரவுசர் போட்டிருப்பார். பெண்கள் பாவாடை போன்ற ஓர் உடையை அணிந்திருப்பார். அது முக்கால் கால் வரை மறைத்திருக்கும்.

### பிரம்பனான் கோயில்

இந்துக்களின் பிரம்மாண்டமான பிரம்பனான் கோயில் ஜாவா தீவில் இருக்கிறது. ஓபக் நதியின் கரையில் இந்தக் கோயில் இருக்கிறது. பிரம்பனான் கோயில் தஞ்சாவூர் பெரிய கோயில் கட்டுவதற்கு நூற்று ஐம்பது வருடங்களுக்கு முன்பே கட்டப்பட்டது. சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் கி.பி. 856-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 12-ஆம் தேதி லோகவாலா என்ற அரசனால் இந்தக் கோயில் கட்டி முடிக்கப்பட்டிருக்கிறது. இந்த இடத்தில் மொத்தம் 220 கோயில்கள் இருந்தனவாம். எரிமலைச் சாம்பல் மூடியதால் கடந்த அறுநூறு ஆண்டுகளுக்கும் மேலாக கோயில் இருந்த இடம் மண் குவியலாக இருந்திருக்கின்றது. தற்போது இருபத்து இரண்டு கோயில்களை மட்டும் மீட்டுருவாக்கம் செய்திருக்கிறார்கள். இந்த இருபத்து இரண்டில் மிகப் பெரியது சிவன் கோயில். 47 மீட்டர் உயரம். நீள, அகலம் 34 மீட்டர். சிவன் கோயிலுக்கு நேர் முன்பாக சிவன் கோயிலின் பாதி உயரத்தில் அவரது வாகனமான ரிஷபத்திற்கான கோயில். அடுத்து விஷ்ணுவிற்கான கோயில். எதிரில் அவருடைய வாகனமான கருடனுக்கான கோயில். அடுத்து பிரம்மா. பிரம்மாவுக்கு எதிரில் அவரது வாகனமான அன்னப் பறவைக்கான கோயில். கோயில் கட்டப் பயன்படுத்தப்பட்ட அனைத்துக் கற்களும் எரிமலைக் கற்கள். கருப்பு நிறக் கற்கள்.

உலகின் மிகப் பிரம்மாண்டமான, மிகப் பழமையான கற்றளி என்பதால் ஒரு வருடத்திற்கு நூற்று இருபது லட்சம் பேர் பிரம்பனான் கோயிலைப் பார்க்க வருகிறார்களாம். அதில் பனிரெண்டு லட்சம் பேர் வெளிநாட்டவர். சராசரியாக ஒரு நாளைக்கு முப்பதாயிரம் உள்நாட்டினரும் மூவாயிரம்



குடியேறியப் பூர்வகுடிகள் இந்து மதத்தை கெட்டியாகப் பிடித்துக் கொண்டுள்ளனர். இந்துக்களுக்கென்று ஆங்காங்கே சிறுசிறு கோயில்கள் உள்ளன. தமிழகத்தின் காளியம்மனும் மாரியம்மனும் இங்கு பிரபல்யம். இந்து அரசர்களும் அவர்கள் கட்டிய அரண்மனைகளும் உள்ளன. ராமாயணமும் மகாபாரதமும் இங்கு தினமும் நாட்டிய நாடகமாக நடத்தப்படுகின்றன. 800 கி.மீ. நீளமும் 400 கி.மீ. அகலமும் உள்ள பாலித் தீவில் மாந்தரீகம், செய்வினை செய்தல் போன்ற மூட நம்பிக்கைகள் அதிகம். தீவின் உள்காடுகளில் ஆதிவாசிகள் வாழ்கின்றனர். இவர்கள் வெளி உலகத் தொடர்பு இல்லாமல் இருக்கிறார்கள். வெளியாட்களைப் பார்த்தாலே

வெளிநாட்டினரும் வருகின்றனர். உள்நாட்டினருக்குக் கட்டணம் இல்லை. வெளிநாட்டினருக்கு கட்டணம் நம் ரூபாயில் மூவாயிரம் ரூபாய்.

## போராபுதூர் பௌத்தக் கோயில்

போராபுதூர் ஸ்ரீ விஜய அரசர்களின் கைவண்ணத்தில் உருவான பௌத்தக் கோயில். சைலேந்திர அரசர்களின் காலத்தில் பௌத்த சாம்ராஜ்யம் உச்சத்திலிருந்தது. ராஜராஜ சோழன், ராஜேந்திர சோழன் போன்ற பேரரசர்களோடு சைலேந்திர அரசர்கள் நல்ல நட்புணர்வுடன் இருந்ததுள்ளனர். நாகப்பட்டினத்தில் பௌத்த விகாரம் கட்ட ராஜராஜ சோழனின் இறுதிக் காலத்தில் அனுமதி கொடுத்ததும், அவனது பேரன் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் பௌத்த விகாரம் நிர்வாகத்தில் மாற்றம் செய்ய அனுமதித்ததும், சைலேந்திர அரசர்களின் வேண்டுகோளின் பேரில்தான்.

போராபுதூர்க் கோயிலுக்குள் புத்தரின் வாழ்க்கை வரலாறு சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. கடலில் மீன்பிடிக்கச் செல்லும் படகு, மீனவர்கள் அமர்ந்திருப்பது, படகில் திசையை மாற்ற திரைச்சீலையைப் பயன்படுத்துவது, மூங்கில் கம்புகளைக் கயிற்றால் பிணைத்துக் கப்பல் கட்டுவது என்று மிகத் தத்ரூபமான சிற்பங்கள் கருத்தைக் கவர்கின்றன.

கி.பி. 850-களில் கட்டப்பட்ட இந்தப் பிரம்மாண்டமான கோயிலில் புத்தரின் வாழ்க்கைப் பனிரெண்டு சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன.

## பாலித் தீவு

பாலியில் இந்துக்கள் 90 சதவிகிதம் இருக்கிறார்கள். இஸ்லாம், கிறிஸ்துவ மதங்கள் இந்தத் தீவில் ஏனோ பரவ முடியவில்லை. பெரும்பாலும் இராமநாதபுரம், மதுரைப் பகுதியிலிருந்து ஆதிகாலத்தில் பாலித்தீவில்

ஓடி ஒளிந்துகொள்வார்களாம். சுற்றுலாப் பயணி என்ற உரிமையில் அவர்களைத் தொந்தரவு செய்தால் அம்புகளை விட்டுத் தாக்குவார்கள்.

விருந்தோம்பலிலும், கேளிக்கைகளிலும் பாலிக்கு முதலிடமுண்டு. இங்குள்ள உணவகங்களிலும், பொது இடங்களிலும் மிக மிக அன்பான வரவேற்பு கிடைக்கும். நீங்கள் ஓர் ஆண் என்றால் அங்கு தங்கியிருக்கும் நாட்களில் நீங்கள் அரசர் போன்ற மிதப்பில் இருக்கலாம். நீங்கள் ஒரு பெண் என்றால் உங்களை ஒரு ராணியாக நினைக்க வைத்துவிடுவார்கள்.

## யானைகள்

சுமித்திரா தீவுதான் யானைகளின் கடைசி தேசம். ஆப்பிரிக்காவிலிருந்து ஆரம்பித்து இந்தியா, தாய்லாந்து, மலேசியா என்று பரவியுள்ள யானைகளின் கடைசி நிலப்பரப்பு சுமத்திரா தீவு. சுமத்திரா தீவிற்கு அடுத்துள்ள ஜாவா, பாலி, பாப்ப நியூகுய்னா என்று எங்கும் யானைகள் கிடையாது. (புலிகளும் அதுபோலத்தான். ஜாவாவே அதன் கடைசி ஜாகை)

## மசாஜ்

இந்தோனேசியாவின் தேசிய பொழுதுபோக்கு மசாஜ். மசாஜ் அலுப்பை நீக்குவதாகவும் புத்துணர்ச்சித் தருவதாகவும் சொல்கிறார்கள். இந்தோனேசியா சென்றவர்கள் மசாஜ் செய்துகொள்ளவில்லை என்று சொன்னால் உடனே நம்பிவிடவேண்டாம். சில நேர்வுகளில் மட்டுமே அது உண்மையாக இருக்கக்கூடும். ●

மு. ராஜேந்திரன் இஆப <dr.mrajendran@gmail.com>

# தேவதேவன் கவிதைகள்



## 19. என்ன நடக்குது இங்கே?

திடீரென்று அவ்விடத்தில் ஒரு கலவரம்.
என்னவென்று புரியவில்லை.
பேருந்துவின் முன்னால் உட்கார்ந்திருந்த
அந்தப் பெண்மணி
அவனுக்கு முன்னிருந்த
வெற்று இருக்கை ஒன்றை நோக்கி
எழுந்து நடந்து வந்தாள்.
அவளுக்குத் தெரியலாமோ என
அவளைப் பார்த்து அவன் வினவினான்.
"என்ன நடக்குது இங்கே?"

அவளும் அறிந்திருக்கவில்லை.
ஆனால், ஏதோ நடக்கிறது விபரீதமாய்
என்பதை மட்டும்
அறியாதார் அங்கு எவரும் இல்லை.
அதனாலோ அவன் கேள்வியைக்
காதில் வாங்கிக்கொள்ளாதவளாய்
அல்லது வாங்கிக்கொள்ளும் முற்கணமே
அவனை நன்குணர்ந்த களிப்புடனே
மலரொன்று இளங்காற்றில் இனிதே அசைவதுபோல்
தலையசைத்தவாறு வந்து அமர்ந்தாள்?

அச்சத்தை ஆழப் புதைத்துவிட்டு
அமைதி ஒளிர மேலெழுந்த
நீர்த் தாவரமுகம்
ஒரு கலவர பூமிக்கு நடுவில்
மரித்துப் போன தன் தந்தையை
இனி ஒருக்காலும் மரித்துப்போகாத
ஒரு தந்தையிடம்
மீண்டும் கண்டடைந்தவள்போன்ற
முதிர்ச்சியும் குழந்தைமையும் இணைந்தொளிர
இளமைக்கும் முதுமைக்கும் இடையில் இருந்துகொண்டு
இளமையினை விடாப்பிடியாய் பற்றிக்கொண்டிருக்கும் வேகம்.
தன் அழகைக் கலைத்துவிடாத
தன் அணிப்பாட்டை விட்டுவிடாத
அழகிலே நம்பிக்கையிழந்துவிடாத
ஒரு பெண்மை.

## 20. ஓடும் ரயிலின் ஒரு குளிர்சாதனப் பெட்டியில்

அதன் கண்ணாடி ஜன்னல் காட்டிய
நிலவெளியின்
அடி ஆழத்திலிருந்து ஒலிப்பதுபோன்ற
ஒலியற்ற கீழ் ஸ்தாயியிலிருந்தது இசை.
திறந்த வாயிலில் வந்து நிற்கையில்
இரைச்சல்களும் கூச்சல்களும்
இதுவரை உலகம் எட்டியிராத
உச்ச ஸ்தாயியில் ஒலித்து
தாங்க முடியாத ஓர் துக்கத்தை உண்டாக்கியது

உயிர்களையெல்லாம்
தழுவும் காற்றை
அன்றுதான் அவன்
ஆழ்ந்து கவனிக்கிறான்.

தன் அந்தரங்கமான
வாழ்வின் இரகசியங்களையெல்லாம்
உரைத்துவிடுகின்றன
ஓசைகளே இல்லாமல்
அசையும் மரங்கள்
ஓடும் ரயிலின்
குளிர்சாதனப்
பெட்டியிலிருந்தவனைக் கண்டு.

தன் இதய ஆழத்தில்
நீந்த வந்துவிட்ட அவனைக்கண்டு
தானும் அதுவரை
காணாத பேருண்மையைக்
கண்டுவிட்ட ஆனந்தத்தில்
கலகலக்கின்றன
நிலவெளியின் தாவரங்கள்
மரங்கள் எல்லாம். ●

••• அம்ருதா பதிப்பக வெளியீடுகள் •••






விலை ரூ.80-.00






விலை ரூ.110-.00






விலை ரூ.170-.00






விலை ரூ.100-.00






விலை ரூ.90-.00






விலை ரூ.130-.00






விலை ரூ.140-.00






விலை ரூ.80-.00

**அம்ருதா பதிப்பகம்**

1, கோவிந்த ராயல் நெக்ஸ்ட்

அடுக்ககம்

12, இரண்டாவது தெரு

மூன்றாவது பிரதான சாலை

சி.ஐ.டி.நகர் கிழக்கு

நந்தனம்

சென்னை 600035

அலைபேசி:

**94440 70000**

# நதியானவள்

வண்ணதாசன்

ஓவியம்: ஜி. ரஹ்மான்

ஜெயக்கொடியை எல்லோரும் 'ஜெயா' என்றுதான் கூப்பிடுவார்கள். ஏஞ்சல் டெய்லர்ஸ் ஆரம்பித்த பிறகு ஆறு மெஷின்களிலும் வேலை பார்க்கிற பெண்கள் 'ஜெயாம்மா' என்று சொல்கிறார்கள். 'கொடி' என்று கூப்பிடுவது மங்களம் மட்டும்தான்.

காலையில் கூப்பிட்டால் அனேகமாக அவள் முந்தின தினம் கண்ட கனவுகளைப் பற்றிச் சொல்ல இருக்கும். அதை அவ்வளவு உடனடியாகச் சொல்ல வேண்டிய அவசியமே இராது. நாளை, நாளை மறுநாள் அல்லது பத்து நாட்கள் கழித்துக்கூடச் சொல்லலாம். ஒன்றும் கெட்டுப் போகாது. ஆனால், எல்லாம் வினோதமாக இருக்கும்.

பாறைகள் பற்றிய கனவு அவளுக்கு நிறைய வரும். பாறைகள் எங்காவது தீப்பிடிக்குமா? திகு திகு என்று காய்ந்த பனை ஓலை எரிவது போலப் பாறைகள் தீப்பிடித்து எரியும் கனவு மங்களத்திற்கு வந்திருக்கிறது. அடுப்புக் கூட்டுவது போல மூன்று கல் கிடக்கிறது. அதன் ஊடாக ஒரு பெரிய பாம்பு ஊர்ந்து செல்கிறது. அந்த முக்கட்டுக் கல்லுக்குள் இருந்து வெளிவந்தவுடன் பாம்பின் தலை முதல் வால் வரை செம்பு நிறத்தில் நெளிந்து செல்லும் ஒரு உலோகப் பாம்பாகிவிடுகிறது. ஒரு கொரில்லா போன்ற மனிதக் குரங்கு, உறைந்து கிடக்கும் பனிப்பாளங்களைக் கடித்துத் தின்கிறதும் துப்புகிறதாகவும் இருக்கிறது. பனித் துகள்கள் அதன் நெஞ்சு ரோமங்களில் விழுந்து உருகி ரோமத்தின் நுனியில் திரண்டு நிற்கிறது. ஒரு கூட்ஸ் வண்டியின் ஒற்றைப் பெட்டி மாத்திரம் வீடு மாதிரி. மங்களம் அதில் சமையல் செய்துகொண்டே சவுரி முடி கட்டுகிற ஒரு பெண்ணுடன் பேசிக்கொள்கிறாள். அந்தப் பெண் உடம்பில் பொட்டுத் துணி இல்லை..



சமீபத்தில் அவள் அழுதுகொண்டே சொன்ன கனவு. கோவில் என்ற உணர்வை உண்டாக்குகிற அடுக்கடுக்கான கல் தூண்கள் உள்ள ஒரு மண்டபம். அதன் நடுச் சவுக்கத்தில் ஒரு குட்டி யானை இறந்து கிடக்கிறது. உடம்பின் மேல் மயில் கழுத்து நிறத்தில் போர்த்தியிருந்த ஒரு பட்டு. வரி வரியாக மஞ்சளும் வெள்ளையுமான பூ மாலைகள். இன்னும் முழுதாகக்கூட வளராத தும்பிக்கையில் ஒரு தாமரைப் பூவைச் சுருட்டி ஏந்தியிருக்க, ஒருஅகல் விளக்கில் திரியிடும் முகம் போலக் குவிந்து தளர்ந்த அதன் கீழ்த்தாடையில் ஒரு சிரிப்பு இருக்கிறது. அந்தச் சிரிப்பு மாரார் ஸ்டுடியோவில் எடுத்த குடும்பப் படத்தில் இருக்கும் மூன்று வயது ராஜியின் சிரிப்பேதான். அந்த மயில் கழுத்து நிறத்தில் ராஜிக்கு ஒரு பட்டுப் பாவாடை கூட உண்டு.

ராஜி என்கிற ராஜேஸ்வரி ஏன் அப்படி இறந்தாள் என்று இன்றுவரை மங்களத்திற்குத் தெரியவே இல்லை. ப்ளஸ் டூ முடித்து, அவளுக்குப் பிடித்த பி.காம். படிப்பில் சேர்ந்து முதல் வருடம்கூட முடியவில்லை. ராஜி சொல்லிக்கொண்டே இருப்பாளாம். படிப்பு முடித்து அவளுடைய அப்பா சேகர் மாதிரி பாங்க் வேலைக்குப் போகமாட்டாள். அப்பா இறந்து போனதால் கருணை அடிப்படையில் வேலை தந்தால்கூட வேண்டாம். அவளே சி.ஏ. எக்ஸாம் எழுதுவாள். ஆடிட்டர் ஆவாள். அதற்குப் பிறகு மங்களம் இப்படிக் கோர்ட் கிளார்க் வேலைக்குப் போய் நாள் முழுவதும் டைப்ரைட்டிங் மெஷினைக் கட்டிக்கொண்டு அழவேண்டாம். வீட்டுக்கு வந்து விரலை உருவி உருவி விட அவசியமே இல்லை. அப்படியெல்லாம் அவள் மங்களத்திடம் சொல்லியிருக்கிறாள். ஆனால், எதனாலோ அப்படிச் செய்துகொண்டாள். ஏன் சேகருக்கு அந்த விபத்து நடந்தது? மங்களத்துக்கு எதனால் என்பதை நிறைய விஷயங்களில் கேட்க முடியாமலேதான் போயிற்று.

'இறந்துகிடந்தயானைக்குட்டி ராஜியேதான். அவள் தான் இத்தனை வருடங்கள் கழித்து சொப்பனத்தில் வந்து எதையோ சொல்கிறாள். எதற்கு அப்படிச் சிரிக்கிறாள்? எதற்கு அப்படி ஒரு தாமரைப் பூவைத் தும்பிக்கையில் வைத்திருக்கிறாள்?' என்று எல்லாம் மங்களம் ஃபோனில் ஜெயக்கொடியிடம் அழுதிருக்கிறாள். அப்படித்தான் இன்றைக்கும் எதையோ சொல்லப் போகிறாள் என்று ஜெயக்கொடி நினைத்தாள்.

மங்களம் இன்று ஆரம்பித்த விதமே வேறு. "காஃபி எல்லாம் ஆச்சா கொடி?" என்றாள், "சங்கராபுரம் படித்துறை முங்கி ஆத்துல தண்ணி போகுதாமே, அப்படியா? நீ அதைத் தாண்டித்தானே ஏஞ்சல்ஸுக்குப் போவே?" என்றாள். "சொல்லு" என்று மாத்திரம் ஜெயக்கொடி சொன்னாள். இதுவரை மங்களம் எதுவுமே சொல்லவில்லை. இனிமேல் தான் சொல்லவே போகிறாள் என்று காத்திருந்தாள்.

ஆனால், பாலத்திலிருந்தே ஆறு நிரம்பிப் போகிற காட்சி அவளுக்குத் தெரிந்தது. நிறையப் பேர் நடுப்பாலத்தில் வாகனங்களின் வேகத்தை மட்டுப்படுத்திப் பார்த்துவிட்டு நகர்ந்தார்கள். ஒரு



ஆட்டோ டிரைவர் ஓரமாக நிறுத்தி நடைமேடையில் ஒரு குதி குதித்து ஏறினார். ஓடுகிற ஆற்றை பார்த்து நிற்கும் அவர் முகத்தில் சாயும் வெயில் மினுங்கியது. ஜெயக்கொடி மினுங்கலின் திசையில் தற்செயலாகச் சிரித்தாள். அவருக்கு ரொம்ப சந்தோஷம். "தண்ணியைப் பாருங்க. குதிச்சிரலாம் போல இருக்கு" என்றார். அது ஞாபகம் வந்தது.

"கொடி, ஒரு உதவி பண்ணணுமே நீயி" என்றாள். "வருஷா வருஷம் அம்மனை ஆத்தில விடுகிறதுக்கு உன்கிட்டேதானே கொடுத்துவிடுவேன். இந்தத் தடவை நானும் உன்கூட வந்துடலாம்னு தோணுது" என்றாள்.

மங்களம் ஒவ்வொரு தடவையும் அம்மனை அவளே செய்வாள். மஞ்சள் பொடியைத் தண்ணீர்விட்டுப் பிசைந்து உருட்டி கைவாக்கில் செய்வாள். உரித்த வெள்ளைப் பூண்டுப் பல்லில் வாகான இரண்டு எடுத்து, பொடி மிளகாகப் பார்த்துப் பதித்துக் கண்கள் ஆக்குவாள். கை தூரத்திற்குத் தள்ளி வைத்துப் பிடித்துக்கொண்டு, "இந்தத் தடவை உருவம் நல்லா அமைஞ்சிருக்கு அல்லவா?" என்று ஜெயக்கொடியிடம் கேட்பது போல அவளிடமே சொல்லிக்கொள்வாள். 'உருவம்' என்று சொல்வாளே தவிர, வாய் தவறிக்கூட 'அம்மன்' என்று சொல்லமாட்டாள்.

ஜெயக்கொடியைப் பொறுத்தவரை அது அம்மன் என்று சொல்கிற வகையில் திருத்தமாக எல்லாம் மூக்கு முழி என்று இராது. நேர்த்திக் கடனுக்குத் தொட்டில் கட்டி, வளையல் சார்த்தி வன்னிமரத்தடியில் வைத்த இசக்கி அம்மன் சுடுமண் பொம்மைகள் போல இருக்கும். துடிக்குக் குறைச்சல் இராது. நாக்கைத் துருத்துகிற மாதிரிக் கற்பனை செய்தால் கொடைக்குக் காளி வேஷம் போடுகிற ஈ.பி. லைன்மேன் வேலு முகம் எதிரே வந்துவிடும். அவர் மெலிவுக்கு காளியின் மார்புக்குச் செய்திருக்கிற ஜோடனை பொருத்தமாக இருக்காது.

ஜெயக்கொடிக்கு மங்களத்தின் யோசனை பிடித்திருந்தது. உடனடியாக மனம் இன்றைய தினத்தை அவளுக்கு மட்டும் விடுமுறையாக அறிவித்தது. அவளுடன் இப்போதெல்லாம் பண்டிகைக் காலங்களில் நின்று கட்டிங் செய்கிற பியூலாவிடம் இன்று பொறுப்பைக் கொடுத்துவிடும் முடிவுக்கு வந்தாள். தையலை மற்றவர்கள் பார்த்துக்கொள்வார்கள். மேலும், ஜெயக்கொடி போலப் பிசிறு இல்லாத அளவில்

மார்க் செய்து கத்தரிப்பது தவிர. இவளைப் போலவே சிரித்துக்கொண்டே தேவைப்பட்டால் வாடிக்கையாளரிடம் ஒரு சிறிய வாய்தா சொல்ல பியூலா பழகியிருந்தாள்.

மங்களம் கூட ஒன்றாக வெளியே போய் வெகு காலம் ஆயிற்று. ஆரம்பத்தில் ஜெயக்கொடி அவளுடைய விவாகரத்துக்காக கோர்ட்டுக்கு அலைந்து கொண்டிருக்கும் போதுதான் மங்களமே பழக்கம் ஆனாள். கோர்ட்டாருக்கு வலது பக்கம் உட்கார்ந்து குனிந்த வாக்கில் டைப் அடிப்பதும் ஒருவித மரியாதையான கோணத்தில் முகத்தை வைத்துக்கொண்டு அடுத்த சொல்லுக்காகக் காத்திருப்பதுமான மங்களத்தின் முகம் காகிதக் கூழால் செய்யப்பட்ட ஒரு வர்ணம் பூசப்படாத பொம்மை போல ஜெயக்கொடிக்கு இருக்கும்.

ஒரு தடவை கோர்ட் கேண்டீனில் வைத்து ஜெயக்கொடிதான் மங்களம் பக்கத்தில் போய் உட்கார்ந்தாள். ஜெயக்கொடி நல்ல உயரம். வாட்ட சாட்டம். நூல் புடவை ரொம்பப் பொருந்தியிருந்தது. ஜெயக்கொடியின் வக்கீல் வந்து, "வேறு எதுவும் வேண்டுமா" என்று கேட்டுவிட்டு, மங்களத்திடமும் "மேடம், நீங்க ஏதாவது சாப்பிடுதீங்களா?" என்று பவ்வியத்துடன் கேட்டார். மங்களம் கையசைப்பால் மட்டும் மறுத்து, அவள் முன்னால் இருந்த சம்புடத்தில் இருந்து தயிர் சோற்றையும் மோர் மிளகாயையும் வாயில் இட்டுக் குனிந்துகொண்டாள்.

வக்கீல் போன பின்பு, தண்ணீர் பாட்டிலைத் திறந்து ஒரு மடக்குத் தண்ணீர் குடித்தாள். கத்தரிப் பூ நிறத்தில் இருந்த அந்த தண்ணீர் பாட்டிலை ஜெயக்கொடிக்குப் பிடித்திருந்தது. பார்வையால் தண்ணீர் கேட்பதாக நினைத்து மங்களம் தண்ணீர் பாட்டிலை எடுத்து நீட்டி, வக்கீலின் இனிஷியலுடன் பேரைச் சொல்லி, அவர்தான் ஜெயக்கொடியின் கேஸை நடத்துகிறாரா என்றாள். அவரில்லை அவருடைய சீனியர் என்றதும் சிரித்தாள். "பத்திரமா இருக்கணும்" என்றாள். அவளே, "பத்திரம்னா பத்திரம். உங்க வயசுக்கு அவ்வளவு சொன்னாப் போறாதா?" என்றாள்.

ஜெயக்கொடியிடம் இருந்து வாங்கின பாட்டிலில் மேலும் ஒரு மடக்குக் குடித்துவிட்டு, "நீங்க இப்படி ஜெயக்கொடியா இருக்கிறதே. போதும். உங்களைப் பொறுத்தவரை வீட்டில உடுத்தின சேலையே கோர்ட்டுக்கு அதிகம்தான்" என்று சொல்லிவிட்டுக் கைகழுவ எழுந்து போய்விட்டாள்.

அதற்கப்புறம் எவ்வளவோ மங்களம் உதவி செய்தாள். எதிர்க்கட்சி வக்கீல் குமாஸ்தா, பெஞ்ச் கிளார்க், ரிஜிஸ்ட்ரார் என்று தீர்ப்பு நகல் கையில் கிடைக்கிறவரை ஜெயக்கொடிக்கு நிறைய உதவி. கோர்ட்டுக்கு வெளியேயும் ஒருவருக்கு ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். பேசிக்கொண்டார்கள். ஒருத்தர் கையை ஒருத்தர் பிடித்துக் கொண்டார்கள். யாரும் யோசித்துக் காய் நகர்த்தவில்லை. இந்தத் தெருவழியாகப் போனால் அந்தத் தெருவுக்குப் போய்ச் சேரும் என்று வழி சொல்லவில்லை. இன்றைக்கு வெயிலடிக்கும், நாளைக்கு மழை பெய்யும் என்று குடை உபயோகம் பற்றி உபதேசம் செய்யவில்லை. ஆனால், தானாக மங்களமும் ஜெயக்கொடியும் நெருக்கமாகிவிட்டார்கள்.

ஜெயக்கொடி, மங்களத்திடம் ஒப்புதல் சொல்லும் போது, அவளுக்கு முன்னால் அந்த தினம் வெவ்வேறு கிளைகளுடன் அடர்ந்துகொண்டே போயிற்று. அதை அவளுக்கே உரிய வேகத்துடன் விஸ்தரித்துக்கொண்டே மங்களத்திடம், "ஒரு சின்ன மாறுதல். சங்கராபுரத்துக்குப் பதிலா நாம் மூலந்துறைக்கே போகிறோம். உன்னுடைய அம்மன் தலையணையிலயே முங்கிக் குளிக்கட்டுமே" என்று சொல்லி, "உருவாய் அருவாய், உளதாய் இலதாய்" என்றாள். மங்களம் அடிக்கடி சொல்கிற வரிகள் அவை.

"சனி ஞாயிறு கொடி. திரும்பின பக்கம் எல்லாம் வேனும் காருமா டூரிஸ்ட் கூட்டம் கச கசண்ணு இருக்கும்" என்று மறுபக்கத்தில் தயங்கினாள்.

"நீ சொல்கிற மாதிரி இன்றைக்கு ஒரு நாள் கச கசண்ணு இருக்கட்டுமே. இன்றைக்கு ஜெயக்கொடிக்கும் மங்களத்துக்கும் இந்த ஊரு இல்லை. அவங்க ரெண்டு பேருமே வெளியூரு டூரிஸ்ட். அப்படி யோசிச்சுப் பாரு. சரியாப் போகும்." இதை ஜெயக்கொடி, மங்களத்திடம் சொல்லும் போதே அவளுக்குப் பிடித்துப் போய்விட்டது.

"கொடி, நாம ஒரு ட்ரிப்பு காசிக்குப் போகணும்" என்று சொன்னாள். இதைச் சொல்லும் போது மங்களத்திற்கு ரொம்ப காலத்திற்குப் பிறகு சேகரின் நினைவு வந்துவிட்டது. எதனால் வந்தது என்று தெரியவில்லை. சேகரும் அவளும் ஒரு தடவை கூடக் காசியைப் பற்றிப் பேசிக்கொண்டதே இல்லை. மங்களம் சேகருடன் கங்கையில் ஒரு படகில் போவது போன்ற கற்பனை எப்படி வந்தது? சேகர் ஒரு பெங்காலி பாபு போல உடையணிந்திருக்கிறான். அது இரவாக இருக்கிறது. சேகர் அகல் விளக்குகளைப் பொருத்தி மங்களத்திடம் கொடுக்கிறான். அவள் குனிந்து குனிந்து கங்கையில் விடுகிறாள். விடவிட எடுத்துத் தந்துகொண்டே இருக்கிறான். படகு ஒரு தானியக் குதிர் போல அள்ள அள்ளத் தீராத அகலும் சுடருமாக வந்துகொண்டே இருக்கிறது.

அவள் சேகரை நினைத்துக்கொண்டே அம்மன் உருவத்தை எடுத்துவைத்தாள். சில தடவை மஞ்சள் கருத்துப் போகும். ஒன்றிரண்டு முறை நெற்றிப் பக்கம் அல்லது முகவாய்ப்பக்கம் எல்லாம் கீறல் விழுந்து வெடித்திருக்கிறது. இந்த முறை அப்படியே இருந்தது. அதன் முகம் ராஜி போல இருக்கிறதாகக்கூட இன்றைக்குத் தோன்றுகிறது. அன்றைக்கு வைத்த செம்பருத்தி, மல்லிகை மாலை, கதம்பச் சரம் எல்லாவற்றையும் சேர்த்து ஒரு பாலிதீன் பையில் வைத்தாள்.

இந்த முறை ஆற்றில் எறிந்துவிடுவதற்குப் பதிலாக, ஒரு வெற்றிலையில் சூடன் பொருத்தி, ஒரு தட்டில் வைத்து ஆரத்தியாக விட்டுவிடலாம் என்று, அதற்கான ஏற்பாடுகளைச் செய்து முடிக்கவும் ஜெயக்கொடியின் ஸ்கூட்டி சத்தம் கேட்கவும் சரியாக இருந்தது.



கொஞ்சம் சீக்கிரமே வந்துவிட்டதால் மூலந்துறையில் இன்னும் கூட்டம் வரவில்லை. தெற்கே இருந்து வருகிறவர்கள் வேலாண்டி மலைக்கோயில் போய்விட்டு வருவார்கள். மேற்கே இருந்து வருகிறவர்கள் அவ்வையார் அருவியில் குளித்துவிட்டு வருவார்கள். புரட்டாசி ஐப்பசியில் அருவியில் நீர் வரத்து இருக்கும்.

ஜெயக்கொடி தன்னை ஒரு சுற்றுலாப் பயணியாகவே பாவித்துக்கொண்டாள். உடையில் மாறுதல் இல்லாவிட்டாலும் கூந்தலைத் தளர்த்திவிட்டுக் கருப்புக் கண்ணாடி அணிந்திருந்தாள். ஒரு கட்டில் இருந்து அவிழ்த்துக்கொண்டு விருப்பத்துடன் தப்பித்து வந்த ஒரு வளர்ப்பு மிருகம் போல இங்கும் அங்கும் நகர்ந்துகொண்டே இருந்தாள். அப்படி நகர்வதன் மூலம் தட்டுப்படும் ஒரு வனத்தின் நுனியின் வழியாகத் திரும்பிவர முடியாத காட்டுக்குள் புகுந்துவிட விரும்பும் மோப்பத்தை அவள் பிடித்துக்கொண்டே இருப்பதாக மங்களம் நினைத்தாள்.

ஒவ்வொருத்தரையும் ஒரு குறிப்பிட்ட சத்தத்தில் இருந்து அப்புறப்படுத்தினால் அவர்கள் வேறு ஒருவர் ஆகிவிடுவார்கள் என்று தெரிந்தது. ஜெயக்கொடி தையல் மெஷின்களின் சத்தத்தை விட்டுவிட்டு வந்ததும் வேறு ஒருத்தி ஆகிவிட்டதாகவே இருந்தது. மங்களம் இரு சுட்டுவிரல்களாலும் இடது வலது காதுகளைப் பொத்துவதாகவும் எடுப்பதாகவும் ஆன விளையாட்டில் தன் பக்கத்தில் டைப்ரைட்டிங் மெஷின் சத்தம் கேட்கிறதா எனச் சோதித்தாள். கேட்கவில்லை என அவளே முடிவு செய்து, தன்னைத்தானே ஒரு முறை சுழற்றிக்கொண்டாள்.

கோர்ட்டில் மங்களத்தைப் பார்த்திருந்த வகையில் இரண்டு போலீஸ்காரர்கள் அவள் பக்கம் வந்து நலம் விசாரித்தார்கள். தேநீர் குடிக்கிறீர்களா என்று கேட்டார்கள். அவள் ஜெயக்கொடியின் ஸ்கூட்டியைப் பார்க் செய்திருக்கும் இடத்தைக் காட்டி, குரங்குகளின் தொந்தரவு இல்லாமல் பார்த்துக்கொள்ளச் சொன்னாள். அவர்கள் ஒரு பயமும் அவசியமில்லை. பார்த்துக்கொள்கிறோம். மெதுவாகக் குளித்துவிட்டு வாருங்கள் என்று உத்தரவாதம் தந்தார்கள்.

ஜெயக்கொடி வழுவழுப்பான மூன்று குத்துக்கல்கள் ஒன்றில் கால்மேல் காலிட்டு உட்கார்ந்திருந்தாள். மக்காச் சோளம் சுட்டு விற்பவர்களின் தள்ளு வண்டிகள், மாங்காய்ப் பத்தை விற்பவர்கள், கோன் ஐஸ் விற்பவர்கள் வரிசை அந்தப் பக்கம் இருந்தது. ஒரு பள்ளம் போல இறங்கும் பகுதியில் மற்ற தேநீர்க் கடைகள், ஹோட்டல்கள் இருந்தன. ஜெயக்கொடி அங்கிருந்து கொண்டே மங்களத்தை அவள் இருக்குமிடத்துக்கு வரச் சொன்னாள். தன்னை ஒரு ஆணின் அசைவுகளோடு ஜெயக்கொடி வைத்திருப்பது போல இருந்தது. அந்தப் பழக்கமற்ற ஆணை மங்களத்திற்குப் பிடித்திருந்தது

மங்களம் பக்கத்தில் போனதும் ஜெயக்கொடி ஒரு கதாநாயகன் போலக் குதித்து, மக்காச் சோளம் சுடும் பாட்டியிடம் போய், இரண்டை எடுத்துக்கொண்டு ஒன்றை மங்களத்திடம் நீட்டினாள். மக்காச் சோளம் விற்கிற பாட்டி பக்கத்தில் ஒரு கிழட்டுக் குரங்கு உட்கார்ந்து மக்காச் சோளம் கடித்துக்கோண்டு இருந்தது. கையில் இருக்கிற நீண்ட சாட்டைக் கம்பைக் காற்றில் வீசி, தரையில் தட்டி, "ஒண்ணு கொடுத்தாச்சுல்ல. போயிரணும்" என்று பேசுகிற குரலில் குரங்கிடம் சொல்லிக் கொண்டு இருந்தாள். அது கேட்பது போலவும், அதுவே இன்னொரு சோளக் கொண்டையை எடுத்துக்கொள்ளப் போவது போலவும் உள்ளங்கையை நீட்டியபடியே இருந்தது. குரங்கின் முதிர்ந்த மார்புகள் சிவந்த காம்போடு தொய்ந்து கிடந்தன. அடுத்தடுத்த நொடிகளில் மங்களம் அந்தப் பாட்டியை ஜெயக்கொடியை தன்னை எல்லாம் கழுத்துக்குக் கீழ் பார்த்துத் திரும்பிக்கொண்டாள்.

இப்போது ஒன்றும் வேண்டாம். மூலந்துறையில் அம்மனை விட்டபின் சாப்பிடுவதாகச் சொல்லி

மங்களம் மறுத்ததும், ஜெயக்கொடி உபரியாக இருந்த சோளத்தை அந்தக் குரங்கிடம் நீட்டினாள். பிடுங்குவது போல அதை வாங்கிக்கொண்டு அது சற்றுத் தள்ளிப்போக, வேறு சில குரங்குகள் குடும்பமாகச் சரிந்து பெரிய நாவல் மரத்தில் இருந்து கீழே இறங்கின. ஜெயக்கொடி எந்தச் சலனமும் இல்லாமல் மக்காச் சோளம் சாப்பிடுகிற தோற்றம் அழகாக இருந்தது. அங்கங்கே கருகிய முத்துக்களுடன், தீக்கங்கு பறக்கிற அடுப்பு பின்னால் இருக்க, முன் பற்களால் நாசூக்காகக் கடித்துத் தின்கிற, அகலக் கருப்புக் கண்ணாடி முகத்துடன் அவளைத் தன் மொபைலில் எடுத்த படங்களை மங்களம் பார்த்துக் கொண்டாள். சேகர் தன்னுடைய கல்லூரி நண்பர்களுடன் மகாபலிபுரத்தில் நிற்கிற படத்தில் கருப்புக் கண்ணாடி இருக்கும்.

அவளுடன் தன்னை ஒரு செல்ஃபி எடுத்துக்கொண்டால் என்ன என்று மங்களத்திற்கு ஆவல் வந்த சமயம், ஜெயக்கொடி அந்தக் குத்துக் கல்லில் இருந்து குதித்து, “பாட்டிம்மா வரட்டுமா” என்று விடை சொல்லியபடி, “போகலாமா மங்க்ஸ்” என்று சிரித்தாள். இதுவரை ஜெயக்கொடி அவளை முழுப்பெயர் சொல்லித்தான் கூப்பிட்டிருக்கிறாள். மங்களம் என்பதை ‘மங்கா’ என்றுகூடக் கூப்பிட்டதில்லை. இன்றைக்கு ‘மங்க்ஸ்’ என்கிறாள். சேகரும் அவள் பெயரைச் சுருக்கி ஒரு நாளும் கூப்பிட்டதில்லை. அப்படிச் சுருக்கிக் கூப்பிட்டது ஒரு பரபரப்பில் அவளை வைத்திருந்தது.

மங்களம் ஒன்றுமே சொல்லாமல் நடந்தாள். ஜெயக்கொடி ஸ்கூட்டியை நிறுத்திய இடத்திற்குப் போய், மாற்று உடைகள் இருக்கிற பையைத் தன் கையில் வைத்துக்கொண்டாள். ஆற்றில் விடவேண்டிய அம்மன், அது சம்பந்தப்பட்ட பூஜை சாமான்கள் அடங்கிய பையை மங்களத்திடம் கொடுத்துவிட்டு முன்னால் நடந்து, ஒரு சிறு முடிச்சுப் போல நின்று பேசிக்கொண்டு இருந்த போலீஸ்காரரிடம், “வந்துவிடுகிறோம்” என்று சிரித்தது வசீகரமாக இருந்தது. பைக்கின் மேல் உட்கார்ந்திருந்த ஒரு காவலர், அவசரமாக இறங்கி ஒரு உயர் அதிகாரிக்குச் செய்கிற மரியாதையுடன் சல்யூட் வைத்தார். மங்களத்துக்கு ஜெயக்கொடியுடன் போய் ஒன்றாக நடந்து போகத் தோன்றியது.

எப்போதும் அந்த இடத்தில்தான் தாழம் பூ விற்கிறவர்கள் நிற்பார்கள். மூலந்துறைத் தாழம்பூ அவ்வளவு விஷேசம். மடலும் வாசமும் அப்படி இருக்கும். அந்தத் தாழம்பூவை அவர்கள் வைத்திருக்கிற கூடை. அதைப் பொட்டலமாகக் கட்டிக்கொடுக்காமல் கூவை இலையில் முழுதாக வைத்துப் பிரசாதம் போல நீட்டுகிற விதம் எல்லாம் வேறு எங்கும் பார்க்க முடியாது. இன்றைக்கும் அதே இடத்தில் இரண்டு மூன்று பேராக நின்றார்கள். பூவை விற்பது போலச் சத்தம் கொடுக்க மாட்டார்கள். நாமாகப் போய் வாங்கிக்கொள்ள வேண்டும். ஒருத்தரிடம் வாங்க நிற்கிறவரை தன் பக்கம் வரச் சொல்லி அடுத்த பூக்காரர் கூப்பிடமாட்டார். அப்படி ஒரு ஐதீகம்.

ஜெயக்கொடி, மங்களம் சொல்லாமலே இரண்டு பூ வாங்கிப் பிள்ளையை ஏந்துவது போல அவளே கையில் கொண்டுவந்தாள். ஒரு ஆளுயர மர பீரோ போல ஜெயக்கொடி இருக்க, அதை அகலமாகத் திறந்து தாழம்பூ மடலை பீரோவின் இரண்டாம் தட்டில் இருக்கும் தன் சேலை மடிப்புகளுக்குள் மங்களம் புதைத்துக் கொண்டாள்.

தரையெல்லாம் அந்தக் காலத்துக் கல் தளம். மறுபடியும் ஒரு கல் பாலம் வரும். படித்துறைக்குப் போவதற்கு முன்னும் கல் மண்டபம் வரும். அந்தக் கல் மண்டபத்தில் ஒரு காலத்திலும் வெயில் பட்டிருக்காது. அந்த இடமும் குளிர்ந்தாற் போலவே எப்போதும். மண்டபத் தூணைத் தொட்டால் அதற்குள் தண்ணீர் தாரைதாரையாக இறங்குவது போல இருக்கும். காதை வைத்துப் பார்த்தால் தண்ணீர் ஓடும் சத்தம் கேட்கும்.

அதைத் தாண்டினால்தான் மூலந்துறையில் ஆறு பொங்கி ஓடுவது தெரியும். பாறைகள் உருள்கிற மாதிரி தண்ணீருக்கு எப்படிச் சத்தம் உண்டாகும்? அதுவரைக்கும் அந்தச் சத்தத்தை அடைத்து வைத்திருக்கும் மாயம் எது? காற்றில்கூடத் தண்ணீரின் உறுமல் கேட்காத வினோதம் எப்படி நிகழ்கிறது? இத்தனைக்கும் கொஞ்சம் மூலந்துறைக்கு மேலே தலையணைக்குப் போனால் அத்தனை பாறையிலும் தண்ணீர் குடைந்து பாய்ந்த துளையும் குழியும் இருக்கும். இங்கே வரும் வரை அந்த ஆவேசத்தின் அடையாளமே கிடையாது.

மங்களம் எல்லாப் பாறைகளையும் எல்லாத் தூண்களையும் இதுதான் முதல் தடவை போல, இதுதான் கடைசித் தடவை போலத் தொட்டுக்கொண்டே வந்தாள். ஜெயக்கொடியைப் பார்க்கும் போதும் ஒரு கல் தூண் போலத்தான், மங்களத்துக்கு இருந்தது. அவளின் நெஞ்சில் காதுவைத்துப் பார்த்தால் நீர்த்தாரை இறங்கிவழியும் சத்தம் கேட்கும் என்று நினைத்தாள். இந்த மண்டபம் பூராவும் தீப்பிடித்து எரிந்தால் எப்படி இருக்கும் என்று மங்களம் யோசித்தாள். அவள் கனவில் எரிந்தது போல கல்தூண்கள் எரிவதைப் பார்க்கமுடிந்தது. ஜெயக்கொடி மண்டபத்தில் கால் நீட்டிக் கல்லாய்ச் சமைந்து அப்படியே உட்கார்ந்திருந்தாள். அப்படியே ஜுவாலையிட்டு எரிந்துகொண்டு இருந்தாள். கூவை இலையில் தாழம் பூ அப்படியே மணந்துகொண்டு பச்சையும் மஞ்சளுமாய் முள்ளும் கள்ளுமாக அந்தக் கல் தீயைப் பார்த்துக் கிடந்தது.

மங்களம் மூலந்துறைப் படித்துறையில் கால் வைத்தாள். களக் களக் என்று தண்ணீரைச் சிதறடித்து நீந்திக்கொண்டு அகாலத்திலிருந்து கருமெழுகு திரட்டி வந்து பிளந்த வாயுடன் மீன்கள் அவள் பாதத்தில் கொஞ்சின. அவள் ஆற்றின் சுழலையும் புனலையும் பார்த்துச் சமைந்தவளாக இருந்தாள். பாதத்தின் வழியாக அவள் அந்தப் புரளும் மீன்களுள் இறங்கிப் புரண்டு வாலடித்துத் தண்ணீர் சிலுப்பினாள். குழிந்து சுழலும் தண்ணீரின் ஒரு புள்ளியைக் கவ்வுவது போல் ஒன்றின் மேல் ஒன்றாக மோதும் மீன்களுக்குள் ஒரு மீனாக இருந்ததிலிருந்து அவளாகக் கரையேறிப் படித்துறைக் கல்லில் அமர்ந்தாள். ஏற்கனவே கழுவப்பட்ட படிக்கல்லை இரு கைகளாலும் அள்ளி அள்ளிக் கழுவினாள். உள்ளங் கையிலிருந்து நீர்ப்பளிங்கு



நழுவிக் கல் கழுவி, கல் செதுக்கி, கற்குழிவிலிருந்து நதியில் வழிந்தது.

மங்களம் எடுத்துவந்திருந்த எல்லாவற்றையும் எடுத்து படிக்கல்லில் வைத்தாள். ஜெயக்கொடி எங்கே இருக்கிறாள் என்று பார்த்தாள். எங்கோ இருப்பாள் என்று நினைத்துக்கொண்டாள். எங்கிருப்பார் எல்லோரும் இங்கிருக்க, இங்கிருப்பார் எல்லோரும் எங்கோ இருப்பார் என்று நம்பினாள். கல்லில் இருந்து யாரும் அகலமுடியாது என்று சிரித்துக்கொண்டாள்.

பூக்களை எடுத்துவைத்தாள். ஏற்கனவே சிவந்த பூக்கள் கல் ஈரத்தில் மேலும் சிவந்தன. வெள்ளைப் பூக்கள் ஈரக் கல்லை மேலும் கருப்பாக்கின. அருகம் புல் பத்தைகள் எல்லாம் பசுங்காடாகிக் காற்றில் அசைந்தன. வெற்றிலை அடுக்குக் கல்லில் கொடிக்கால் இட்டு மண்டபத் தூணில் படர்ந்தன. வெல்ல அச்சு மஞ்சள் மேருவாகி நிமிர்ந்தது. சூடன் மணந்தது சூடாப் பூவாக. கடைசியாக அம்மனை மஞ்சள் ரூபிணியாக எடுத்துவைத்தாள். மிளகு விழியும் பூண்டுக் கண்ணுமாக அம்மன் பிரவாகம் பார்த்துப் பிரவகித்தாள்.

எல்லாம் தெரிந்தது போல, உணர்ந்தது போல், ஜெயக்கொடி எழுந்துவந்து கொண்டு இருந்தாள். கூவை இலையில் தாழம்பூ ஏந்தி, கல் தூண் நெகிழ்த்தி அவள் வருவதன் அந்தரத்தை மங்களம் பார்க்கையில், கல்மண்டபத்தின் மேலிருந்து யாரோ ஆடை அகற்றி வீசியது காற்றில் நெளிந்து இறங்குவது போல இருந்தது. அந்த நெளிவின் லயத்துடன் இருந்தது ஜெயக்கொடியின் நடை. ஜெயக்கொடி அங்கேயே நீராடியிருந்தாள். உடல் நனைந்து, உடை நனைந்த அவளுடைய உயரம் அலைந்து கலைவதையே மங்களம் பார்த்தாள்.

“இங்கே பாறை ஜாஸ்தி. ஆழம் ஜாஸ்தி. இழுப்பு ஜாஸ்தி. கசம் ஜாஸ்தி” என்று ஜெயக்கொடி அடுத்தடுத்த இடைவெளிகளுடன் மங்களத்திடம் சொன்னாள். அந்த இடைவெளிகளின் நிதானம் கூழாங்கல் போல் ஆற்றில் ஒவ்வொன்றாக அமிழ்ந்தது. அவள் உச்சரிப்பு மாறியிருந்தது. ஜெயக்கொடி ஒரு சொல்லை இத்தனை தடவை சொல்கிறவள் அல்ல. அவள் சாய்ந்திருந்த கல் தூணின், தொட்டு வந்த கல் தூணின் தனித்தனிச் சொல் அவை என்று மங்களம் புரிந்துகொண்டாள்.

“ஒன்றும் ஜாஸ்தி இல்லை. ஒன்றும் கம்மி இல்லை” என்று கை உயர்த்தி நதி பார்த்துக் கும்பிட்டாள். மூன்று முறை முங்கினாள். நதி நீர் இருகைகளிலும் அள்ளி உயர்த்தி அர்ப்பணமாக நதிக்கே வார்த்தாள். முன்னால் வீசி முகம் மறைத்து முங்கித் தீர்த்தமாடிய கூந்தலைப் பின்னுக்கு விசிறியதில் ஒரு நீர் வில்



எய்தாள். பூ எடுத்து அர்ச்சித்துப் படித்துறைக் கருங்கல்லில் இருக்கும் அம்மனை வணங்கினாள்.

ஜெயக்கொடி கண்மூடி சூரியன் திசையை வணங்கிக்கொண்டு இருந்தாள். அருகில் வந்து மங்களம் போலவே நீரில் நின்று அம்மனை வணங்கினாள். வெற்றிலை கிள்ளி,வெல்லம் கிள்ளி, நீர் விளாவி, சூடன் காட்டின மங்களத்தைப் பார்த்து, “மஞ்சள் பூசினாயா?” என்று கேட்டாள். “உன்னையும் சேர்த்து வணங்குகிறேன்” என ஜெயக்கொடி சொன்னாள்.

மங்களம் கைகளில் கூவை இலையை ஜெயக்கொடி வைத்தாள். தாழம் பூவின் வெளிமடல் ஒன்றைப் பிரித்து அகற்றி ஒரு முள்ப் படகு போல நெடுக்கு வாக்கில் பரப்பினாள். அப்புறம் வெற்றிலை மேல் அந்த மஞ்சள் அம்பிகை. அதன் பக்கத்தில் இரண்டு மூன்று சூடன் வில்லை. கையில் தீப்பெட்டியுடன் ஜெயக்கொடி நிற்கையில் மங்களம் இரண்டடி இன்னும் ஆழத்திற்கு இறங்கினாள். ஜெயக்கொடி குச்சியை உரசிச் சூடனை ஏற்ற மங்களம் கைகளை நீட்டிக் குனிந்தாள்.

அப்படியே மூலந்துறைப் பிரவாகத்திற்கு நிமிர்ந்து நின்று மங்களம் ஆரத்தி காட்டினாள். குனிந்து ஆற்றில் விட்டாள். அது அலையோடு அலையாய் சுடர்ந்து அடங்கும் வரை அப்படியே நின்றாள். கூவை இலையிலிருந்து தாழம்பூவின் ஒற்றை மடல் விலகி, வெற்றிலை விலகி, பூ விலகி நீரில் மிதப்பதைப் பார்த்து மீண்டும் கண்மூடி வணங்கினாள்.

ஜெயக்கொடியைப் பார்த்துத் திரும்பி மங்களம் சிரித்தாள். சிரிப்பு மங்களத்தை முழுவதுமாக நிரப்பியிருந்தது. அவள் மேல் பாறையும் பாறை மேல் அவளும் நீர் சுழித்து நுரைத்துப் படர்ந்து வழிந்துகொண்டு பெருகும் கோலம்.

“உன்னைப் பார்த்தால் கும்பிடலாம் போல இருக்கு” என்று ஜெயக்கொடி இப்போதும் சொன்னாள்.

“கும்பிடு” என்று சொன்ன மங்களம் ஒவ்வொரு உடையாகக் களைந்து நதியில் எறிந்தாள். மஞ்சள் பூ ஒன்றிலிருந்து இதழுதிர்த்து உதிர்த்து மஞ்சள் மொக்குக்குத் திரும்பிக்கொண்டு இருந்தாள். மங்களமாக மட்டும் நின்றாள்.

“கும்பிடு” என்று மறுபடி சொன்னவள் ஒரு முறை ஜெயக்கொடியை வணங்கினாள். ஒவ்வொரு திசையாக நான்கு திசைகளையும் வணங்கினாள். தலைக்கு மேல் கைகள் உயர்த்தி நதியை வணங்கியபடி நதியில் மேலும் புகுந்தாள்.

ஜெயக்கொடியால் நதியானவளை நதியாகத்தான் பார்க்க முடிந்தது. ●

வண்ணதாசன் <vannadasan@mail.com>

# ஷங்கர்ராமசுப்ரமணியன் கவிதைகள்

## 1. சங்குபுஷ்பம்

1.1

அவள் தான்
நிகழ்ந்த
அவள் அது தான்
வீட்டில்
வெளியில்
உலகில்
சங்கு புஷ்பங்களாகப் பூத்துள்ளன.

1.2

வேறு யார்
சங்கு புஷ்பங்களுக்குப்
பெயர் சூட்டியிருக்க முடியும்?

1.3

செடியில்
நூலெனச் சுருண்டு
நெளியும்
கொடியில் பூத்திருக்கிறது.

1.4

மம்மர் அளிக்கும்
மம்மர் தீர்க்கும்
மருந்தா?
நீலமும் வெள்ளையுமாக
ஹரியும் ஹரனும் சூடும்
சங்குபுஷ்பம்.

1.5

நளினம்
மென்மை
அழகு
திருவவள் ஆடிய லாஸ்யம்
அவன் ஆசையுடன்
சூடிக்கொண்ட பூ.

1.6



கசப்பு இனிப்பு
இரண்டும் தான்.
இருக்கிறாள் இல்லை
புலப்படுகிறாள் புலப்படாமலும்.
ஒரு பிற்பகலில்
அவள் மீது
ரயில் ஜன்னல் வழியாக
ஆடிய ஒளி தான்
அவளா

1.7

விடமேறியதை
நான்
பருகிய போது
நீ
என்
கழுத்து பற்றி
படர்ந்த நீலம்
சங்குபுஷ்பத்தின் ஓரங்களில்

## 2. கோதை

மரங்களை இலைகளை
அழகிய நிழல்களாய் மலர்த்தியிருந்தது
மூன்றாம் பிறை நிலவு
சற்றுமுன்னர் தான்
மின்சார வெளிச்சம் போயிருந்த
அந்தத் தெருவில்
ஆடும்
கல்வெள்ளித் தொங்கட்டான்கள்
அணிந்தும் அணியாத
தளராடையில்
வெண்டை விரல்களை
அபிநயித்து உரையாடியபடி
தோழியுடன் அவள் கடந்தாள்
அவள்
கடந்ததைப் பொறுக்க முடியவேயில்லை
திரும்பிப் பார்த்தேன்.
நிலா குனிந்து பார்க்க
இருட்டில் இடுப்பில்
குடத்துடன்
வளையல்கள் அதிரும் வெளிச்சம் மட்டுமே
இருக்கும் வீதியில்
சென்ற
ஆழ்வாரின் மகள்
ஞாபகத்துக்கு வந்தாள்
அப்போது
ஒரு ஓட்டுச்சாய்வு வீட்டின் திண்ணையில்
ஏற்றப்பட்ட
நாகவிளக்கில்
தீபங்கள்
காற்றில் ஆடிக்கொண்டிருந்திருக்கும்
இல்லையா

3.

மழைக்கு முந்தைய
சன்ன இருட்டு
சூரியன் மங்கிய தெருக்கள்
பழைய வெள்ளியாய் மின்னியது
பேருடல்
பெரும் ஒப்பனை இட்ட
மயில்
நகரத்தின் அகவலைக் கேட்டு
தாய்ப்பன்றி ஒன்று
குட்டிகள்
வரிசையாய் பின்தொடர
பால்முலைகள் குலுங்கி குலுங்கி
புதரை நோக்கி விரைந்த போது
இப்படித்தான் அவ்வப்போது
பயப்படத் தேவையில்லை
என்று ஆறுதல் சொன்னது.

4.

இந்த இரவில்
தூங்காத
பொருள்கள்
உயிர்களாலான
ஒரு உலகம்
ஊஞ்சலாக ஆடிக்கொண்டிருக்கிறது

க்ரீச்ஞ்.க்ரீச்ஞ்.க்ரீச்

5.

அன்புள்ள நகுலனுக்கு
சென்ற ஞாயிறன்று
கவிஞர் வே. பாபு
இறந்துவிட்டார்
உங்களது ஒரு மென்கிளை அவர்
என்பதை நீங்கள் அறிந்திருக்கலாம்.
கடந்த சில நாட்களாக
நான்
பார்க்கும் செவ்வரளிப் பூக்கள்
மேலும் சிவந்திருக்கின்றன.



கவிஞர் வே. பாபு (புகைப்படம் நன்றி: விகடன்)

## 6. பால் அற்ற எருமை

சங்க காலம்
ஜே. கிருஷ்ணமூர்த்தியின் காலம்
இரண்டையும்
நிஜத்தில் ஆறாகவே
பார்த்த ஞாபகம் கொண்டது
அடையாற்றுக் கழிமுகம்.
தற்போது
கருப்பாகிவிட்ட நீரிலிருந்து
அந்தியில்
மெதுவாக எழுந்து நடந்தது
பகல் முழுவதும் அங்கே திளைத்த
ஒரு  எருமை
நிலத்திட்டுகள்
கரையைத் தாண்டி
சாவகசமாகச் சாலைக்கு வந்தது.
மூளை வரை ஈரம் உணரப்பட
உடனே வீடுசெல்ல மனமின்றி
ஓரத்தில் குப்பையாகப் படர்ந்திருக்கும்
செடிகளுக்குள் புகுந்தது
கழுத்தில் ஒரு பீர்க்கங்கொடியை
இலையும் பூவுமாக
விலைமதிக்க இயலாத நகையாய்ச் சூடி
நிழலில் அழகு பார்த்தது
சாம்பலும் தெருவிளக்கொளியும் பீர்க்கம்பூவும்
இலைகளும்
மிருதுவாக்கிய எருமை நான் என்ற
பெருமிதத்துடன்
சாவகாசமாக
நடைபோட்டது.
ஆண்குறியையும்
பெண்குறியையும்
எளிமையாக அழித்தெழுத
மிகச் சமீபத்தில்
கடவுள் கண்டுபிடித்த
சின்ன ரப்பரால்
வெற்றிகரமாகப் பரிசோதிக்கப்பட்ட
முதல் பால் அற்ற எருமை அது
அடையாற்றின் கரையில்
அசைந்து அசைந்து போய்க்கொண்டிருக்கிறது. ●

ஷங்கர்ராமசுப்ரமணியன் <shankarashankara@gmail.com>

# பைத்தியமும் பைத்தியக்காரனும்

## முகமது சஃபி

Madness - Roy Porter; Faber And Faber, London, 1993

மனநோயின் வெவ்வேறு ரகங்களைப் பற்றி , அதன் காரண - காரியங்களைப் பற்றி, அதன் சிகிச்சை முறைகளைப் பற்றி மனநலத் துறையைச் சார்ந்தவர்கள் எழுதுவது ஒருவகை. அந்தப் பதிவுகள் விஞ்ஞானத்தின் சாட்சிகளாக 'அதிகாரப் பூர்வமான' ஆவணங்களாக நிமிர்ந்து நிற்பவை. அந்த விஞ் ஞான சாட்சிகளின் அடிநிழலாக, மனநோயாளிகளே தங்கள் அனுபவங்களைப் பற்றி எழுதிய பதிவுகள் இன்னொரு உலகமாக இருக்கிறது. அதன் நீட்சியாக, மனநோயினைப் பற்றி சிந்தித்தவர்கள், படைப்பாளிகள் உருவாக்கிய பைத்தியக்கார கதாபாத்திரங்கள், மனநோயாளிகளை உடனிருந்து பராமரித்தவர்களின் அனுபவங்கள் என்று அந்த உலகம் பரந்து விரிகிறது.

பேசப்படாத மனநோயாளிகளின் பதிவுகளை, மனநோயாளிகளின் முணுமுணுப்புகளைத் திரட்டி 'பைத்தியம்' என்ற இந்த ஆவணத் தொகுப்பைக் கொண்டு வந்திருக்கிறார் ராய் பார்ட்டர் என்ற ஆய்வாளர்.. ஆய்வாளர் என்பது கூட சம்பிரதாயமான வார்த்தை. உண்மையில் அவர் மருத்துவத்தின் சமூக வரலாறு என்ற துறையின் பேராசிரியர். குறிப்பாக மனநலத்துறையின் வரலாற்றில் தனிப்பட்ட அக்கறை கொண்டவர். (இந்தியக் கல்விப் புலத்தில் இந்தத் துறைகளெல்லாம் எப்போது உருப்பெறும் என்பது நமக்குத் தெரியாது.)

எழுதப்பட்டவைகள் திரட்டப்பட்டு மனிதத் துயரங்களைப் பற்றிய ஒரு ஆவணமாக நமக்குக் கிடைப்பதே பெரிய விஷயம்.



பைத்தியம் என்ற சொல்லைப் பயன்படுத்துவதை மனநலத்துறையைச் சார்ந்த சிலர் ஆட்சேபித்தாலும், அதை இழிவாகப் பயன்படுத்தாமல், அந்தச் சொல் தினசரிப் புழக்கத்தில் அகலமான அர்த்தச் செறிவு கொண்டிருப்பதால், நான் அதைப் பயன்படுத்தப் போகிறேன் என்ற நிலைபாட்டுடன் தொடங்குகிறது ராய் பார்ட்டரின் பைத்தியப் புத்தகம்.

சுமார் ஐந்நூறு பக்கங்களுக்கும் மேல் இருக்கிறது. பைத்தியத்தோடு தொடர்புடைய பல விஷயங்கள் பத்தொன்பது அத்தியாயங்களாக்கப் பட்டிருக்கின்றன.

பைத்தியமும் பட்டறிவும், பிறழ்வின் மூலகாரணங்கள், பைத்திய நிலைக்கு ஆட்படல், பிறழ்வான நம்பிக்கைகள் (Delusions), பைத்தியக்கார விடுதிக்கு உள்ளே, மருத்துவர்களும் மனநோயாளிகளும், உளப்பகுப்பாய்வு, பாலியல், பைத்தியமும் மேதமையு என்று அத்தியாயங்கள் விரிகின்றன.

அப்புத்தகத்திலிருக்கும், விலாசமில்லாத ஒரு அனாமத்தான மனநோயாளியின் சுயசரிதையிலிருந்து சிறுபகுதிஞ்

மனித சமூகத்தில் ஒரு பாதியினர் மற்ற பாதியினர் எப்படி வாழ்கிறார்கள் என்ற புரிதலே இல்லாமல் இருக்கிறார்கள்... செல்வந்தர்கள் வறியவர்களைப் புரிந்துகொள்வதில்லை, பெண்களைப் பற்றி அறவே புரியாதவர்களாக ஆண்கள் இருக்கிறார்கள், நாஸ்திகர்களுக்கு நம்பிக்கையாளர்களைப் பற்றிய உணர்வே இருப்பதில்லை. ஆனால், நம்மில் பெரும்பாலோருக்கு பைத்திய நிலை பற்றிய புரிதலானது அடைபட்டே கிடக்கிறது.

தன்னைத் தோண்டி, பாதிக்கும் மேலாக தன்னைப் புரிந்துகொள்வதற்காக அவர் தன் வரலாற்றை எழுதியிருப்பார் என நாம் நம்பலாம்.

என்ன செய்துவிடும் இந்த மனநோயாளிகளின் பதிவுகள்?

கூடுதலாக மனநோய் பற்றிய ஆழமான புரிதலை உருவாக்கும். நோயின் அறிகுறிகளாகவோ, ஒருவர் மேல் ஒட்டப்படும் விஞ்ஞானத்தின் லேபிளாகவோ மட்டுமே நினைவுகளில் ஒருவர் சுருங்கிப் போவதைத் தடுக்கும். மதிப்பிழந்தவை என்று ஒதுக்கிவிடாமல் ஒருவரின் சிந்தனையைக் கிளறுவதாயும் இருக்கின்றன பைத்தியக்காரர்களின் கூற்றுக்கள்.

மேற்கில் ஐநூறு வருடங்களுக்கும் மேலாக மனநோயினைப் பற்றி நுணுக்கி நுணுக்கி எழுதி ஏகப்பட்ட ஆய்வு நூற்கள் வந்திருக்கின்றன. அதேபோல, தமிழ்ச் சூழலில் பைத்தியத்தின் வரலாற்றினைத் தொகுக்க முடியுமா?

சங்க கால வேலன் வெறியாட்டிலிருந்து தொடங்கி, நவீன தமிழ் இலக்கியத்திலும், வெகுஜன சினிமாவிலிருந்தும் நிறைய உதாரணங்களை எடுக்கலாம்.

எழுத்தாளர் பாதசாரியின் 'பேய்க்கரும்பு' (தமிழினி, 2008) என்ற நூலிலிருந்து கணிசமான பகுதிகளை மனநலம் சம்பந்தப்பட்டு நாம் பொறுக்கலாம். அந்தப் புத்தகத்திலிருக்கும், 'எனது தற்கொலைக்கு யாரும்



பைத்தியகாரன்? (1947) படத்தில் என்.எஸ். கிருஷ்ணன், டி.ஏ. மதுரம்




காரணமல்ல, நானே கூட' என்ற ஒற்றை வரியை விரித்தால் 'நான் காரணமல்ல' என்றால் சமூகமா? அப்படியென்றால் தனிமனிதன் யார்? சமூகம் என்பது என்ன? என்ற புள்ளியிருந்து விவாதத்தைத் தொடங்கினால், தற்கொலை பற்றி விரிவாக ஆய்வு செய்த எமில் டர்க்கெய்ம் புத்தகத்தின் அருகில் போய் அந்த ஒற்றை வரி நிற்கும் (Emile Durkheim, Suicide, 1897).

தமிழில் 'பைத்தியக்காரன்' என்ற ஒரு சமூகப்படம் 1947இல் வந்தது. தலைப்பின் இறுதியில்




'பைத்தியக்காரன்?' என்று கேள்விக்குறி இருக்கும். சகஸ்ரநாமம், எம்.ஜி.ஆர்., என்.எஸ். கிருஷ்ணன், டி.ஏ. மதுரம் இரு வேடங்களில் நடித்த படம் இது. லட்சுமிகாந்தன் கொலை வழக்கில் சிக்கி சிறையிலிருந்து மீண்டு வந்து என்.எஸ்.கே. நடித்த முதல் படம். கணவனை இழந்த இளம்பெண்ணின் மறுமணம் பற்றிய கதை. கணவனை இழந்த மகளுக்கு மறுமணம் செய்ய தயக்கம் காட்டும் ஒரு தந்தை, தனது மனைவி இறந்தவுடன் எந்த விவஸ்தையும் இல்லாமல் ஓர் இளவயதுக் கன்னியை மண முடித்துக்கொள்கிறார். இந்தப் பழைய சமூக மதிப்பீடுகளைக் கேள்வி கேட்கும் கதாநாயகன் பைத்தியமாகக் கருதப்படுவான்.

சுதந்திரத்தின் அடையாளமாக பெண்கள் சைக்கிள் ஓட்டுவதை கனவு கண்டவர் பெரியார். அதன்படியே இப்படத்தில் கதாநாயகி மதுரமும் சைக்கிள் ஓட்டுவார். அதுபோக, மதுரம் முகப்பவுடரும் உதட்டுச்சாயமும் பூசிக்கொண்டு தனது அழகை ரசித்து சிரிப்பதாக ஒரு க்ளோசப் காட்சிவரும். ஐம்பது வருடங்களுக்கும் மேலான பிறகு, மகளிர் அழகு நிலையங்களின் பெருக்கத்தில் சகஜமாக வளர்ந்த, ஸ்கூட்டியில் பறக்கும் நவீன பெண்களுக்கு அந்தக் கால, அந்தக் காட்சி ஒரு வினோதமாகத்தான் படும்.

பைத்தியங்களின் வரலாற்றில் ஏன் அக்கறை?

வாழ்வின் நெருக்கடியில் பிறழ்வான, பைத்தியக்கார எண்ணங்கள், உணர்வுகள், தாறுமாறாகத் தோன்றாத மனம் எது? ●

# பின்நகர்ந்த காலம்

## வண்ணநிலவன்

எடிட்டருடைய நெருங்கிய நண்பர் நடிகர் ஜெய்சங்கர். ஜெய்சங்கரை எடிட்டருக்கு அவர் சினிமாவில் நடிப்பதற்கு முன்பே தெரியும். ஜெய்சங்கர் ஷூட்டிங் இல்லாத நாட்களில் 'துக்ளக்' அலுவலகத்திற்கு வந்து சோவுடன் பேசிக்கொண்டிருப்பார். இதுபோல் 'துக்ளக்' அலுவலகத்திற்கு அடிக்கடி வரும் இன்னொரு நடிகர் அசோகன். கிறிஸ்துமஸ், புத்தாண்டு தினங்களில் அசோகன் மெனக்கிட்டு பெரிய கேக்கை 'துக்ளக்' அலுவலகத்திற்கு எடுத்து வந்து எல்லோருக்கும் தருவார். அனந்தகிருஷ்ணனை பிரியத்துடன் 'முதலியாரே' என்று அழைப்பார். அவர், கோயமுத்தூரில் நடந்த 'துக்ளக்' ஆண்டு விழாவுக்கு எங்களுடன் ரயிலிலேயே வந்தார். அந்த ஆண்டு விழாவிலும் கலந்துகொண்டார்.

எம்.ஜி.ஆரைக் கதாநாயகனாகப் போட்டு அசோகன் ஒரு படம் எடுத்து வந்தார். சில பாடல் காட்சிகள் படமாக்கப்பட்டிருந்தன. கால்வாசிப் படம் கூட முடிந்திராத நிலையில், அந்தப் படத்திற்குக் கால்ஷீட் தராமல் எம்.ஜி.ஆர்., அசோகனை இழுத்தடித்து வந்தார். அசோகன் இதனால் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தார்.



ஜெய்சங்கர், சோவின் கதை-வசனம்-இயக்கத்தில் ஒரு நகைச்சுவைப் படமெடுக்க விரும்பினார். ஏ.எல்.எஸ். புரொடக்ஷன்ஸில் மேனேஜராக இருந்த வீரையாவுடன் கூட்டுச்சேர்ந்து ஜெய்சங்கர் படத்தை ஆரம்பித்தார். 'கூவம் நதிக்கரையினிலே' என்பது படத்தின் பெயர். சில நாட்கள் ஷீட்டிங் நடந்தது. ஒரு பாடல் காட்சி அந்நாளைய மவுண்ட்ரோட்டில் படமாக்கப்பட்டது. ஆனால், இந்தப் படம் முழுமைபெறவில்லை. இதுதான் எடிட்டர் கடைசியாக இயக்கிய படம். அந்தப் படத்தில் எடிட்டருக்கு உதவியாக, இணை இயக்குநராகப் பணிபுரிந்தவர் நாமக்கல் ரா.பாலு. பாலு, நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளையின் புதல்வர், இயக்குநர் கே.பாலசந்தரிடம் பல படங்களில் உதவி இயக்குநராகப் பணியாற்றியவர்.

நாமக்கல் ரா.பாலுவும் 'கூவம் நதிக்கரையினிலே' படப்பிடிப்பின்போது, 'துக்ளக்' அலுவலகத்திற்கு அடிக்கடி வருவார். எங்களுடன் பேசிக் கொண்டிருப்பார். அவருக்கு மகிமை நாராயணன் என்ற சினிமா புரொடியூஸரைத் தெரியும். அந்தப் புரொடியூஸர் தனது படத்தின் கதை விவாதத்திற்கு நாமக்கல் பாலு மூலம் என்னை அழைத்தார். பாலு, "தி.நகர் சுதாரா ஹோட்டலில் ரூம் போட்டிருக்கிறோம்; உங்களைக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்" என்று கூறினார்.

"சார்... எனக்கு சினிமா டிஸ்கஷனில் எல்லாம் கலந்து பழக்கமில்லையே..." என்றேன்.

"அவள் அப்படித்தான்' படத்துல டயலாக் எல்லாம் எழுதியிருக்கீங்கன்னுதான் அவர் உங்களைக் கூட்டிட்டு வரச் சொன்னார் சார்..." என்றார் பாலு.

'இது என்னடா வம்பாகப் போய்விட்டது; மழை நின்றும் தூறல் விடவில்லை என்கிற மாதிரி, அந்தப் படம் தியேட்டரை விட்டுத் தூக்கப்பட்டுப் பல நாட்களுக்குப் பிறகு, இப்படியொரு தொல்லையா' என்று நினைத்தேன். எவ்வளவோ மறுத்தும் பாலு விடவில்லை. "சார்... எனக்காக வாங்கசார்..." என்றார். "என்னால் ஆஃபீஸுக்கெல்லாம் லீவு போட முடியாது..." என்றேன். "காலையிலே பத்து மணி வரை டிஸ்கஷன் வைத்துக் கொள்வோம். அதுக்கப்புறம் நீங்க ஆஃபீஸுக்குப் போங்க..." என்றார் பாலு.

பாலு என்ற நல்ல மனிதருக்காக ஒரே ஒரு நாள் அவருடன் போய் உட்கார்ந்துவிட்டு வந்தேன். அடுத்த நாள் அந்தப் பக்கமே போகவில்லை. பாலுவும் என்னை விட்டுவிட்டார்.

இந்த மாதிரி இன்னொரு சான்ஸும் வந்தது. அதுவும் 'அவள் அப்படித்தான்' படம் செய்த வேலைதான். ஆனந்தவிகடனில் ஆர்ட்டிஸ்ட்டாகப் பணிபுரியும் ஸாரதியின் அக்கா மகன் ஸ்ரீனிவாஸன் என்பவர், க்ளாரியன் அட்வர்டைஸிங் கம்பெனியில் வேலை பார்த்து வந்தார். அவர் கம்பெனி ஸ்பிக்


பிரமிள்


ஜெய்சங்கர்

உர விளம்பரங்களைச் செய்து வந்தது. ஸ்பிக் உரத்திற்கான ஒரு விளம்பரப் படத்தை நான் எழுதித் தரவேண்டுமென்று ஸாரதி என்னிடம் சொன்னார்.

ஸாரதியை நீண்டகாலமாகத் தெரியும். அவருக்காக அந்த விளம்பரக் கதையை எழுதித் தர வேண்டியதாயிற்று. ஒரு நிமிடப் படம்தான். எண்ணூறு ரூபாய் தந்தது க்ளாரியன் கம்பெனி. 'அவள் அப்படித்தான்' படத்தில் பங்குபெற்றதன் பின் விளைவு இவை எல்லாம்.

ஒரு நாள் ஏ.வி.எம்.மின் மருமகனான அருண் வீரப்பன் என்னைத் தேடி 'துக்ளக்' அலுவலகத்திற்கு வந்தார். அவரும் 'அவள் அப்படித்தான்' படத்தைப் பார்த்துவிட்டுத்தான் என்னைத் தேடி வந்தார். தனது காரில் என்னை ஏற்றிக்கொண்டு உட்லேண்ட்ஸ் டிரைவ் இன் ஹோட்டலுக்குச் சென்றார். டிபன், காபி எல்லாம் சாப்பிட்டோம். அரை மணி நேரத்திற்கு மேல் பேசிக்கொண்டிருந்தார். எதற்காக என்னை அழைத்துக்கொண்டு வந்தார் என்பது என் மரமண்டைக்கு ஏறவில்லை. பிறகு, என்னைத் தன்னுடைய காரிலேயே வீட்டில் கொண்டு வந்துவிட்டார்.

இரண்டு, மூன்று நாள் கழித்து மீண்டும் என்னை அழைத்துக்கொண்டு உட்லேண்ட்ஸ் டிரைவ் இன்னுக்குப் போனார். ஒரு படம் பண்ணவேண்டும் என்றார். என்னிடம் கதை இருக்கிறதா என்று கேட்டார். நான் வழக்கம் போல் திருதிருவென்று விழித்தேன். அவ்வளவு பெரிய பணக்காரர்; ஏ.வி.எம்.மின் மருமகன். கதைக்காகத்தான் என்னை அணுகியிருக்கிறார் என்பது அப்போதுதான் எனக்கு புரிந்தது. "ஒன்றும் அவசரமில்லை; யோசித்துச் சொல்லுங்கள்... நாம் தினசரி சந்திப்போம்..." என்றார் அருண் வீரப்பன்.

நான் திரைக்கதை வசனகர்த்தாவான ஆரூர்தாஸோ ஏ.எல். நாராயணனோ, பாலமுருகனோ அல்ல. ஏதோ அகஸ்துமாஸ்தாக, ருத்ரையா என்ற நல்ல நண்பருக்காக ஒரு படத்திற்கு எழுதப்போய், அதன் பின்விளைவுகள் இப்படியெல்லாம் என்னைத் தொடர்ந்தன. நாலைந்து முறை டிரைவ் இன்னுக்கு என்னை அருண் வீரப்பன் அழைத்துப் போனார். ஒன்றும் காரியமாகவில்லை. பிறகு, அவராகவே புரிந்துகொண்டு சென்றுவிட்டார். எனக்கு டிபன், காபி வாங்கிக் கொடுத்ததெல்லாம் வீண்.

நான் பிறவி எழுத்தாளனோ, திரைக்கதை வசனகர்த்தாவோ அல்ல. நான் எழுத்தாளனானது, பத்திரிகையாளனானது எல்லாம் ஜீவனோபாயத்திற்காகத்தான். பிழைப்பு. வேறென்ன? லட்ச லட்சமாகப் பணம் சம்பாதிக்கவேண்டுமென்றெல்லாம் ஒரு காலத்திலும் நினைத்ததே இல்லை. ஏதோ வயிற்றுப்பாட்டுக்கு இருந்தால் போதும் என்று நினைக்கிறவன். அதனால்தான், சினிமாத் தொழில் என்னை ஈர்க்கவே இல்லை. ருத்ரையாவுடைய படத்தில் வசனமெழுதியது ஒரு விபத்து. தற்செயல்.

தெ. சண்முகம் 'உதயம்' என்ற இலக்கியப் பத்திரிகையை நடத்தி வந்தார். எப்போதும் வேட்டிதான் கட்டுவார். இலக்கியக் கூட்டங்களுக்கெல்லாம் வருவார். 'உதயம்'-மாதப் பத்திரிகை. திருவொற்றியூரிலிருந்து வெளி வந்தது. ஆர். ராஜேந்திரசோழனின் கதைகளெல்லாம் அதில் வெளிவந்துள்ளன. சண்முகம் உதயத்தை ஒரு இடதுசாரிப் பத்திரிகையாகவே நடத்தி வந்தார். 'செம்மலர்' மாதிரி அதிகப் பிரசாரத்தன்மை இல்லாத பத்திரிகை 'உதயம்'.

கே.எம். வேணு கோபால் 'விடியல்' என்ற இலக்கியப் பத்திரிகையை நடத்தினார். இதுவும் ஒரு இடதுசாரி இதழ்தான். ஈஸ்வரன் 'மனிதன்' என்ற இடதுசாரி இதழை நடத்தினார். கோவையிலிருந்து ஏற்கெனவே 'வானம்பாடி' வெளிவந்து கொண்டிருந்தது. இளவேனில் 'கார்க்கி' என்ற இடதுசாரி இதழை நடத்தினார். பெருந்துறையிலிருந்தும் ஒரு இடதுசாரி பத்திரிகை வந்தது. 1973,74,75—இல் பல இடதுசாரிச் சிறு பத்திரிகைகள் வெளிவந்தன.

'எழுத்து', 'நடை', 'கசடதபற', 'யாத்ரா' போன்ற சிறு பத்திரிகைகள் இலக்கியத்தில் கலையை வலியுறுத்தின. தீபமும் கணையாழியும்கூட. நடையிலும் கசடதபறவிலும் எழுதிய 'வெ.சா.' என்ற வெங்கட்சாமிதனுக்காகவே ராஜபாளையத்திலிருந்து 'யாத்ரா' வந்தது. யாத்ராவில் மாதா மாதம் வெங்கட்சாமிநாதன் எழுதினார். 'அஃக்' பத்திரிகையிலும்கூட வெ.சா. எழுதியிருக்கிறார். முற்போக்கு இடதுசாரி எழுத்துக்களை வெ.சா. தொடர்ந்து எதிர்த்து வந்தார். அவரது எதிர்ப்பில் நியாயமும் இருந்தது. அழகுணர்ச்சியே இல்லாமல் ஏராளமானோர் எழுதினர். அதை 'முற்போக்கு இலக்கியம்' என்றும் அப்போது சொல்லிக்கொண்டனர்.

முற்போக்கு முகாம் எழுத்தாளராக இருந்தாலும் கலாபூர்வமாக எழுதியவர் ஆர்.ராஜேந்திரசோழன் மட்டுமே. பூமணியையும் இதில் சேர்த்துக்கொள்ள வேண்டும். கோ.ராஜாராம், வேலுமித்திரன் என்றா பெயரிலும் பல நல்ல கதைகளை எழுதியிருக்கிறார். ஆனால், மதுரையிலிருந்து எழுதிய ஆ.சந்திரபோஸ், பரிணாமன், ராஜபாளையம் எழுத்தாளர்களான அழ.கிருஷ்ணமூர்த்தி, கொ.மா. கோதண்டம், பூ.அ. துரைராஜா, கொ.ச. பலராமன் போன்ற பலரது எழுத்துக்கள் வறட்டுத் தனமாகவே இருந்தன. ஆனால், அவை முற்போக்குப் படைப்புகள் என்று இனம் காணப்பட்டன. இரா.கதைப்பித்தனும் இவர்களில் அடக்கம்.

இலங்கையிலும் இந்த முற்போக்கு இலக்கியம் கொடிகட்டிப் பறந்தது. டொமினிக் ஜீவா, செ. கதிர்காமநாதன் போன்ற வெகுசிலரது எழுத்துக்களைத் தவிர பலரது படைப்புகள் வெறும் பதர்களாகவே இருந்தன. செ.யோகநாதன், கே.டேனியல் போன்றோரெல்லாம் கொண்டாடப்பட்டனர். தமிழ்நாட்டில், முற்போக்கு என்ற முத்திரையில் வறட்டுத்தனமாக எழுதப்பட்ட கதைகளை வெ.சா. எதிர்த்தது போல், இலங்கையில் இந்த முற்போக்கு முகமூடிகளை மு. தளையசிங்கம் எதிர்த்தார். துரதிர்ஷ்டவசமாக மு.தளையசிங்கமும் வறட்டுத்தனமாகவேதான் எழுதினார் என்பதை மறக்க முடியாது.

தர்மு சிவராம் அப்போது ராயப்பேட்டையில் பைலட் தியேட்டருக்கு எதிரே இருந்ததெருவில் ஒரு மாடியில் வசித்து வந்தார். நானும் விக்கிரமாதித்யனும் அவரை அவ்வப்போது சந்திப்போம். அவர் தானே சமைத்துச் சாப்பிட்டு வந்தார். தேவதேவனை மட்டும்தான் அவர் கவிஞராக ஒப்புக்கொண்டார். அப்போது 'மேல் நோக்கிய பயணம்' தொகுப்புக்கான கவிதைகளை எழுதிக் கொண்டிருந்தார். சில லினோ கட் ஓவியங்களையும் தோலில் வெட்டி வைத்திருந்தார். நியூமராலஜி படி எனது பெயரிலுள்ள எழுத்துக்களை மாற்றச் சொல்வார்.

சந்திரசேகர் என்ற அவரது நண்பர் ஸ்டேட் பேங்கில் பணிபுரிந்து வந்தார். அவர்தான் தருமுவுக்கு உதவி வந்தார். சந்தரசேகர் ஷெனாய் நகர் பக்கம் அறை பார்த்துக்கொண்டு போனபோது, தர்மு சிவராமும் அவருடன் ஷெனாய் நகர் அறைக்கே சென்றுவிட்டார். சந்தரசேகரரையும் பார்ப்பேன். சந்திரசேகர் அதிகமாகப் பேசமாட்டார்.

ஒருநாள் தர்முசிவராம் செக்கஸ்லோ வேக்கியாவைப் பற்றி நீண்ட நேரம் பேசினார். அங்கு கம்யூனிஸ்ட்கள் எப்படி வந்தனர் என்று விவரித்தார். இது போல் பல நாட்டு அரசியலையும் பற்றி தர்மு தெளிவாகப் பேசுவார். எனக்கு அவரது அரசியலறிவு, அவரது படிமக் கவிதைகளைப் போலவே ஆச்சரியபடுத்தும். நானறிந்த வரை அவரளவு உலக அரசியலைப் புரிந்து வைத்திருந்த இலக்கியவாதி யாருமில்லை. நான் மந்தை வெளியில் குடியிருந்த போது அடிக்கடி என் வீட்டுக்கு வருவார். திடீரென்று ஒரு நாள் கோதுமை ரவையைக் கொண்டுவந்து என் மனைவியிடம் கொடுத்தார். நானும் மனைவியும், "எதற்கு இதெல்லாம்? நீங்களே கஷ்டப்படுகிறீர்கள்... வேண்டாம்..." என்றோம்.

"நான் கொடுத்தா, வாங்க மாட்டியா?" என்று கோபித்துக்கொண்டார். அவர் மனம் ரொம்ப விசித்திரமானது.

(தொடரும்)

வண்ணநிலவன் <ramachandran.u49@gmail.com>



Published by Prabhu Thilaak, No. 5 - 5th Street, Somasundaram Avenue, Shakthi Nagar, Porur, Chennai - 600 116;
Printed by A. Chandran on behalf of AMRUDHA, Ayyanar Offset, No. 10 Subbarao Nagar, Choolaimedu, Chennai - 600 094;
Owner and Editor: Prabhu Thilaak

